# இரண்டும் ஒரே தோற்றம் தான்







கலவை : 70% காப்பி 30% சிக்கரி

கலவை : 80% காப்பி 20% சிக்கரி

# ஒன்றில் கசப்பு குறைவு

இரண்டு இன்ஸ்டன்ட் காப்பி—சிக்கரி கலவைகளில் உள்ள வித்தியாசத்தைக் காட்டுவது எளிதல்ல. ஆனால் கலவையை பொறுத்துத்தான் சுவை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். சிக்கரி அளவுக்கு அதிகமானால் கசப்பாக இருக்கும். எனவேதான் ஸன்ரைஸ் தரும் கூடுதல் காப்பி சுவையும் ஸ்ட்ராங்கும் உங்களுக்கு சிறப்பாக இருக்கிறது. ஏனெனில், ஸன்ரைஸில் காப்பியும் சிக்கரியும் 80:20 என்ற விகிதத்தில் கலந்திருக்கிறது. மற்ற சாதாரண இன்ஸ்டன்ட் கலவை யிலோ 70:30 என்ற விகிதம். ஸன்ரைஸ் கசப்பாக இல்லாமல் சிறப்பாக ருசிப்பதற்கு இதுவே காரணம்.

நாங்கள் சொல்வதை நம்புவதைவிட நீங்களே சுவைத்துப் பாருங்கள்.




Nestlé
**ஸன்ரைஸ்**

இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி கலவை

## கூடுதலான காப்பி கலவை

HTA 5118A TAM

# வேலைக்குப் போகும் பெண்கள்; நாட்டை உயர்த்தும் கரங்கள்!



"உனக்கென்ன குறைச்சல்...? உம்? கண் நிறைந்த கணவர், அழகான குழந்தை. அடிப்படைத் தேவைகளைச் சுலபமாகப் பூர்த்தி செய்து கொள்ளும் அளவுக்குப் பொருளாதார வசதி. நிம்மதியாக வீட்டில் இருப்பதை விட்டுவிட்டு, ஏன் வேலைக்குப் போகிறேன் என்று அவதிப்படுகிறாய்?".

"நீங்கள் குறிப்பிடும் எல்லா வசதிகளும் இருந்தும் வீட்டிலேயே முடங்கிக் கிடந்தால் எனக்கு மன நிம்மதி கிடைப்பதில்லையே! எனக்குள் ஏதோ ஒரு வெறுமை. ஒரு சூன்யம் இருப்பதைப் போல் உணர்கிறேன்."

"வெறுமை! சூன்யம்! —பெரிய பெரிய வார்த்தைகளைப் பயன்படுத்துகிறாய். எல்லாம் வேலையற்றுப் போய் நாவல்களைப் படிப்பதால் வரும் வினை!"

"நாவலும் இல்லை! கீவலும் இல்லை! வீட்டு வேலை, குடும்பப் பராமரிப்பு என்பவை மகிழ்ச்சி தருகிற விஷயங்களானாலும் அவை வாழ்க்கையின் ஓர் அம்சம்தான். ஒரு சிறிய வட்டம்தான். நான் அந்த வட்டத்திலிருந்து வெளியே வர விரும்புகிறேன்."

—படித்த, விவரமறிந்த பெண்கள் இருக்கும் வீடுகளிலெல்லாம் இன்றைக்குக் கேட்கின்ற உரையாடல் இது.

வட்டத்திலிருந்து வெளியே வந்தவர்கள் சிலரைச் சந்தித்தோம்:

• மல்லிகா



**ஜானகி வெங்கட்ராமன்**

இவர் செய்வது பெண்களைப் பொறுத்த மட்டில் ஓர் அபூர்வமான தொழில்—பகுதி நேர மெடிகல் ரெப்ரசண்டேடிவ் தொழில்! அலைச்சல் மிகுந்த இந்த வேலையை "அப்படியொன்றும் கஷ்டமானதில்லை" என்று வர்ணிக்கிறார் இவர். "தினமும் குறைந்த





• பிரேமாவதி



• ராஜி மணி

பட்சம் ஐந்து டாக்டர்களைச் சந்திக்க வேண்டும். நான் வசிக்கும் நகர்ப் பகுதியிலேயே உள்ள டாக்டர்களையும் மருந்துக் கடைக்காரர்களையும் சந்திக்கிறேன். குழந்தை பள்ளியில் இருக்கும் நேரத்தில் மொபெட்டில் சென்று என் வேலையை முடித்து விடுவேன். சில சமயங்களில் மாலை ஆறு மணிக்குக் கிளம்பி இரவு திரும்புவதுண்டு. இத்தகைய சந்தர்ப்பங்களில் குழந்தையை மாமியார் பார்த்துக் கொள்வார். கணவரும் ஒத்துழைப்பார். மருத்துவ, மருந்துத் துறையினரும் பெண் மெடிகல் ரெப்ரஸென்டேடிவ்களை முழுமையாக அங்கீகரித்துள்ளனர்.''

## கிரிஜா

''காலம் இருக்கிற இருப்பிலே என் கணவர் சம்பாத்தியத்தில் மட்டும் நான் என் குழந்தையை நல்லவிதமாகப் படிக்கவைத்துக் குடித்தனமும் செய்ய முடியாது. அதனால் நான் இப்போது செய்து வரும் அரசாங்க வேலையை விடுவதாக இல்லை'' என்று தீர்மானமாகக் கூறுகிறார் கிரிஜா. தினமும் குழந்தையைக் காப்பகத்தில் கொண்டு வந்து விட்டுவிட்டு அலுவலகம் போகிறார்.

''காப்பகங்களில் குழந்தைகளை விட்டுப் போவது அவ்வளவாக வரவேற்கத் தக்கதில்லை என்றொரு அபிப்பிராயம் இருக்கிறதே!'' என்றோம்.

''நம்பிக்கை வேணும்!'' என்றார் கிரிஜா.

''நான் என் குழந்தையைக் காப்பகத்தில் விட்டுச் செல்லும்போது என் தாயிடம் ஒப்படைத்துவிட்டுப் போவதைப் போலத்தான் உணர்கிறேன். குழந்தையும் அங்கு (பொன்மொழி குழந்தைகள் காப்பகம்) சந்தோஷமாக இருக்கிறாள்.''

## சாரு மன்சந்தர்

இன்னும் திருமணமாகவில்லை. அதனால் குழந்தை, கணவன் 'அட்ஜஸ்ட்' பண்ணிக் கொள்வது போன்ற கவலைகள் இவருக்கில்லை. ஆனால் ஒரு தனியார் நிறுவனத்தில் பணியாற்றும் இவர் வேலை சவால்கள் நிறைந்தது: — கம்ப்யூட்டர்கள் மற்றும் அவை சம்பந்தமான உபகரணங்களைப் பல்வேறு நிறுவனங்களுக்கு விற்பது. அந்தத் துறையில் எவ்வளவு போட்டி உள்ளது. என்பது யாவரும் அறிந்ததே. ''சக ஆண் மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவ்களைவிட நான் எந்த விதத்திலும் குறைந்து போய்விடவில்லை! என் வேலைகளைக் கச்சிதமாக முடித்து மேலதிகாரிகளின் பாராட்டைப் பெறுகிறேன். பெண்களிடம் விடாமுயற்சி, சகிப்புத் தன்மை ஆகிய குணங்கள் இயல்பாய் இருக்கும். இதனால் தன்னைவிட வயதில் குறைந்த ஒருவர் தன்னிலும் உயர்ந்த பதவியை வகிப்பதை ஒரு பெண்ணால் எளிதில் ஜீரணித்துக் கொள்ள முடியும். அதையே ஓர் ஆண் ஜீரணிப்பது சிரமம்!''

## மல்லிகா

இவரை நாங்கள் சந்தித்த போது அரை டஜன் செங்கற்களை அனாயாசமாகத் தலையில் தூக்கியபடி ஒயிலாக ஏணியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்.

''சித்தாள் வேலைக்கு ஏன் வந்திங்க?''

''அம்மா இறந்துட்டாங்க! அதுக்குப் பிறகு குடும்ப வருமானம் குறைஞ்சு போச்சு. அதனால் சித்தாள் வேலைக்குப் போக ஆரம்பிச்சேன்.''

''தினப்படி வேலைக்கு வருவதில் ஏதேனும் சங்கடம் இருக்கிறதா?'' என்று கேட்ட போது நம்மை விநோதமாகப் பார்த்தார் மல்லிகா.

''சங்கடமென்ன? சந்தோஷம்தான்'' என்று இடைபுகுந்து சொன்னார் மல்லிகாவின் சித்தி. ''ஒரு கட்டட வேலைன்னா ஆறு மாசத்துக்குத் தினக்கூலி உறுதியாகக் கிடைக்கும். கூடுதல் வருமானத்துல பசங்களை நல்ல பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப முடியுது. அப்பப்போ ஏதாவது சினிமாகூட பார்க்கறோம்......''

## ராஜி மணி

பி. எட் பயிற்சி பெற்ற இவருக்குத் திரு



மண தினத்தன்றே ஒரு பிரபல பள்ளியில் ஆசிரியை வேலைக்கான வாய்ப்புக் கிடைத்தது. குடும்பச் சூழ்நிலை கருதி அவர் அப்போது அதை ஏற்கவில்லை. இரண்டு பெண்கள் பிறந்து இப்போது உயர்நிலை வகுப்பிலும் கல்லூரியிலும் படிக்கிறார்கள். இன்று



• ராதிகா

ராஜி மணி பள்ளி ஆசிரியையாகப் பணியாற்றுகிறார்.

''இப்போது என் வாழ்க்கையே அதிக அர்த்தமுள்ளதாகவும் பயனுள்ளதாகவும் ஆகியிருப்பதை உணர்கிறேன். குழந்தைகளுக்குக் கற்பிப்பதில் அளவிட முடியாத திருப்தி கிடைக்கிறது.

''வீட்டில் இருந்த வரை மத்தியான வேளையில் பொழுது போகாமல் அவஸ்தைப்பட்டு சினிமா, ஷாப்பிங் என்று அக்கம்பக்கத்தாருடன் போய்ப் பணத்தை வீணடித்துக் கொண்டிருந்தேன். இப்போது என்னடாவென்றால் ஒரு நாளைக்கு நாற்பது ரூபாய் சம்பாதிக்கிறேன்.''

''திடீரென்று வேலைக்குப் போக ஆரம்பித்ததால் உங்களுக்கு ஏதேனும் பிரச்னைகள் ஏற்பட்டனவா?''

''எதையுமே எளிதாக எடுத்துக் கொள்ளலாம்; அல்லது நமது அணுகு முறை மூலம் எதையுமே பிரச்னை ஆக்கலாம்! — நான் முதல் ரகம்'' என்றார் அவர்.

## பிரேமாவதி

பல வருடங்களாகச் சென்னையில் ஓர் அரசாங்க அலுவலகத்தில் பணியாற்றி வருகிறார். பொறுப்பான பதவி. இரண்டு பெண்கள் இவருக்கு. அவர்கள் பிறந்து, பேறுகால விடுப்பு முடிந்த கையோடு மீண்டும் வேலையில் சேர்ந்து விட்டார். குழந்தைகள் இவரது சகோதரர்களின் மேற்பார்வையில் வளர்ந்தன. ''என் கணவரிடமிருந்து அபரிமிதமான ஒத்துழைப்புக் கிடைக்கிறது'' என்கிறார் பிரேமாவதி. ''அவரால் தமது வேலையை 'அட்ஜஸ்ட்' செய்து கொண்டு குறித்த நேரத்தில் வீட்டுக்கு வந்து விட முடியும். அதனால் நான் சற்றுத் தாமதமாக வந்தாலும் அவர் குழந்தைகளைக் கவனித்து, டிபன் தயாரித்துக் கொடுத்து விடுவார். அன்றாட வேலைகளில் நான் கேட்காமலே எனக்கு உதவுவார்...''

''இந்த வேலையால் எனக்கு ஒரு சாதனை உணர்வு கிட்டியுள்ளது. நான் வேலைக்குப் போவதால் என் குழந்தைகள் எந்தவிதத்திலும் பாதிக்கப்படவில்லை.''

## ராதிகா

''தினமும் என் மூன்று வயது மகள் 'அம்மா! ஆபீஸ் போகாதே!' என்று கெஞ்சும்போது, 'அப்படியாவது வேலைக்குப்

• குழந்தையைக் காப்பகத்தில் விட்டுவிட்டுப் போகிறார்





• ராஜி மணி



போக வேண்டுமா?' என்று அலுப்புத் தோன்றுகிறது. ஆனால் இருவரும் சம்பாதிக்கிறோம் என்ற தைரியத்தில்தான் சொந்தத்தில் ஃபிளாட் வாங்க முடிந்திருக்கிறது. அவ்வப்போது 'எது முக்கியம்?' என்ற போராட்டம் மனத்துக்குள் தோன்றிக் கொண்டேயிருக்கும்'' என்று கூறும் ராதிகா, தமது மாமியாரின் உதவியையும் ஒத்துழைப்பையும் நன்றிப் பெருக்கோடு குறிப்பிட்டார்.

''என் போன்ற பெண்கள் பலர் சிறு குழந்தைகளைக் காப்பகங்களில் விட்டுவிட்டு வருகிறார்கள். ஆனால் எனக்குத் தெரிந்து எந்தக் காப்பகமும் சுகாதாரமாகவும் நம்பகமாகவும் இல்லை. என்றைக்காவது நான் என் வேலையை விடுவது என்று தீர்மானித்தால், ஒரு குழந்தைகள் காப்பகம் ஆரம்பித்து, நம்பகமான ஆட்களின் துணை யுடன் அதை நன்றாக நடத்துவேன்.''

## ஜெயா அருணாசலம் ('பத்மஸ்ரீ' விருது பெற்ற' சமூக சேவகி)

அலுவலகங்களுக்குப் போய் வேலை செய்பவர்கள் மட்டுமே உழைக்கும் மகளிர் அல்ல. தினக்கூலிக்கு உழைக்கும் கட்டட வேலை செய்வோர், விவசாயக் கூலி வேலை செய்யும் பெண்கள், பீடி தொழிற்சாலைகளில் பீடி சுற்றும் பெண்கள், தெருவில் காய்கறி, பூ என்று சிறு வியாபாரம் செய்யும் பெண்கள் — இவர்கள்தான் மொத்த உழைக்கும் பெண் வர்க்கத்தில் பெரும்பான்மையினர். இவர்களது வேலை நேரமும் சரி, கூலியும் சரி நிர்ணயிக்கப்பட்ட விதிகள்படி அமைவதில்லை. போராடும் துணிவை அவர்கள் பெற்றாலும் வேலை போய்விடுமே என்கிற பயம் ஏற்பட்டுத் தடுத்துவிடும். வேலையை இழப்பதை அவர்களுடைய பொருளாதார நிலை அனுமதிக்காது.

''சிறு வியாபாரம் செய்யும் பெண்களுக்கு இருநூறு ரூபாய் முதல் அறுநூறு ரூபாய் வரை கடனுதவிகள் செய்தால் அவர்களுடைய வியாபாரம் நன்றாக விருத்தி அடையும். ஆனால் வங்கிகள் சில்லறைக் கடன்கள் தருவதைத் தலைவலியாக நினைத்து மறுத்து விடுகின்றன. பத்துப் பேருக்கு ஐந்நூறு ரூபாய் தருவதை விட ஒருவருக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்தால் வேலை சுலபமாக முடிந்து விடுமே!

''பின் தங்கிய நிலையில் உள்ள இந்தப் பெண்களுக்குத்தான் குடும்பப் பிரச்னைகளும் அதிகம்: தினமும் குடித்துவிட்டுக் கையில் காலணாக் காசில்லாமல் வரும் கணவர்கள், சரியான பராமரிப்பும் படிப்பும் இன்றித் தாமே வளரும் குழந்தைகள்; எவ்வளவு உழைத்தாலும் அரை வயிறு கூட நிறையாத பரிதாபகரமான பொருளாதார நிலை...

''இவ்வளவு பிரச்னைகளிருந்தாலும் லட்சக்கணக்கான பெண்கள் வேலைகளில் ஈடுபட்டு, சொற்பமாகச் சம்பாதித்து வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்றால் அவர்களுக்குக் குடும்பத்தின் மீதுள்ள பொறுப்பும் பாசமும்தான் காரணம். அதுவும் தாய்மை உணர்வின் வெளிப்பாடு தான்.''

## செல்வி ரமேஷ் (தலைவி, மகளிர் மேம்பாட்டுக் கழகம்)

பெண்கள் வேலைக்குப் போவதால் நிகழ்ந்து கொண்டிருக்கும் ஒரு வருந்தத்தக்க விஷயம் கூட்டுக் குடும்ப அமைப்பின் முறிவு தான். அலுவலகத்தில் தன்னுடன் வேலை செய்யும் பிறருடைய போக்குகளை அனுசரித்துப் போகத் தயாராய் இருக்கும் பெண், வீட்டில் மாமியாருடனும் இதர பெரியவர்களுடனும் அனுசரித்துப் போகத் தயாராயில்லை. அதனால் தனிக் குடித்தனங்கள் பெருகிவிட்டன. இதே நிலை நீடித்தால் இந்தியாவின் பொக்கிஷம் போன்ற குடும்ப அமைப்புச் சிதைந்து போய், மேற்கத்திய நாடுகளைப் போல் நாமும் வாடகைக்குப் பாட்டிகளைத் தேட ஆரம்பிப்போம் — ஆமாம்! அங்கெல்லாம் முதியோர் இல்லங்களிலிருந்து 'வாடகைப் பாட்டிகள்' கிடைக்கிறார்கள்! எனவே பெண்கள் வேலைக்குப் போவதை வரவேற்கும் போதே, அவர்களுக்கு நமது பண்பாட்டையும் மரபையும் உடைந்து போகாமல் கட்டிக் காக்கும் பெரும் பொறுப்பு இருப்பதையும் வலியுறுத்த விரும்புகிறேன்.

'**வே**லைக்குப் போகும் பெண்ணைத் தான் திருமணம் செய்து கொள்வேன்' என்று கூறும் ஆண்களுள் எத்தனை பேர் அவளுடன் வீட்டு வேலைகளைப் பகிர்ந்து கொள்ளத் தயாராய் இருக்கிறார்கள்? பிரேமாவதியின் கணவர் போன்றோர் நமது சமூகத்தில் அபூர்வம். இருபத்தோராம் நூற்றாண்டை நெருங்கிவிட்ட இன்றைய நிலையிலும் 'வேலைக்குப் போகும் மருமகள் வேண்

# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு




களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூ கோன்-டி: க்ளூகோஸ், விட்டமின்-டி, கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காபி அல்லது தண்ணீரிலே கலந்து அருந்த, குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்கெட்டுகளில் கிடைக்கிறது.

**க்ளூகோன்-டி**

ஸூப்பர்ஹீரோ மிகவிரும்பும் சக்திபானம்.

HTA 1097



டும் என்றோ அல்லது வேலைக்குப் போகாத பெண்ணைத்தான் திருமணம் செய்து கொள்வேன்' என்றோ நிபந்தனைகள் போடுவது அநாகரிகம். வீட்டை விட்டுப் பெண் வெளியேறுவதை—அவள் கருத்துச் சுதந்திரத்துடன், பொருளாதாரச் சுதந்திரமும் பெற்று வாழ்வதை—இன்னமும் பலரால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. அது மட்டும் அல்ல. பெண்கள் வேலைக்குப் போவதை ஒரு பொருளாதாரக் கண்ணோட்டத்துடன் மட்டுமே அணுகுகிறோம். அந்த வேலையில் கிடைக்கும் பண லாபங்களைக் கருதி அதை ஏற்கிறோம். அல்லது 'பெண்டாட்டி சம்பாத்தியத்தில் சாப்பிடுவதா?' என்ற மனப்பான்மையில் அதை வெறுக்கிறோம். இத்தகைய பொருளாதாரக் கண்ணோட்டத்தில் அல்லது சுயகௌரவப் பாதிப்பில் பெண்ணின் உணர்வுகள் மறக்கப்படுகின்றன. அவள் செய்யும் வேலையில் அவள் மனம் வளம் பெறுகிறதா? மனம் வளம் பெறுவதால் அவள் ஒரு மேலும் நல்ல தாயாக, குடும்பத் தலைவியாக இருக்கிறாளா? என்றெல்லாம் நாம் யோசிப்பதே இல்லை. கட்டிப் போடுவதாலும் கட்டுப்படுத்துவதாலும் மன வளத்தைப் பெருக்க முடியாது. குடிமக்களின் மனங்கள் வளம் பெற்றால் தான் நாடு மேம்படும்.

பெண்கள் வேலைக்குப் போகக் கூடாது என்று கண்ணை மூடிக்கொண்டு கூறுபவர்கள் சற்று சிந்திக்கட்டும். இந்திய வயல்வெளிகளில் நாற்று நடுவது, களை பறிப்பது, அறுவடை செய்வது போன்ற வேலைகளைச் செய்யும் மகளிர் உங்கள் வாக்கை வேத வாக்காக எடுத்துக் கொண்டு வேலைக்குப் போகாமல் இருந்துவிட்டால்...? கட்டட வேலைகளில் உதவும் சித்தாள் பெண்கள் ஓய்வாக இருப்போமே என்று தீர்மானித்து விட்டால்...? மத்திய, கீழ்மத்தியதர வகுப்பினரின் வீடுகளில் பத்துப் பாத்திரம் தேய்த்து, வீட்டு வேலை செய்யும் பெண்மணிகள் துடைப்பத்தைப் போட்டுவிட்டு ஓய்வெடுக்கப் போய்விட்டால்...? நாடே ஸ்தம்பித்துப் போய் விடாதா?

**— நமது நிருபர்கள்**

மேலட்டை வண்ணப்படங்கள்: **யோகா**

புகைப்படங்கள்: **யோகா, கே. வி. ஆனந்த், சோமு.**



இரத்தக் கிணறுகளோ — நம்
இந்திய மாநிலங்கள்?
மரணக் கொடிபிடிக்கும் — இந்தத்
தேசம் மயானமோ?

நித்தம் படுகொலைகள் — எந்த
நிமிடமும் பொட்டழிக்கும்.
செத்தவர் மூச்சுகளில் — தினம்
செய்திகள் நெய்தழுவார்!

பட்டினி பஞ்சங்கள் — பெரும்
பாதக வேற்றுமைகள்
முட்டிக் குடல்சரிந்தார் — மேல்
மோதிடும் ஆட்சி ரதம்!

அழுகிய கட்சிகளால் — கெட்ட
அரசியல் வாடையினுல்
கிழக்கிலும் சிழ்வடியும் — ரணச்
சூரியக் கீற்றுதரும்.

மனத்தில் நகம் வளர்ப்பார் — தீய
வஞ்சக நஞ்சூட்டி
தினமும் பகையெழுப்பி — இந்தத்
தேசத்தைக் கீறிடுவார்!

போலி முழக்கங்கள் — வெறும்
பொய்ம்மையாய் ஒற்றுமைகள்!
கேலிக் கிடமின்றி — என்ன
கிழித்தன இன்றுவரை?

எங்கும் கலவரங்கள் — இங்கு
எதிலும் சுயநலங்கள்
தங்க இடந்தேடி — நீதி
தாண்டியது நாட்டெல்லை!

— தமிழன்பன்

# நாமிருக்கும் நாடு




**கல்கி**

1987 ஆகஸ்ட் 9
மலர் 46 இதழ் 2
பிரபவ ஆடி 24




# வெற்றி பெறுமா, ஒப்பந்தம்?

இந்தியாவில் மளமளவென்று சரிந்து விழுந்து கொண்டிருக்கும் தமது செல்வாக்கை மீண்டும் தூக்கி நிறுத்த ராஜீவ் காந்தி அவசரம் அவசரமாக இலங்கைக்குப் பறந்து போய் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டிருக்கிறார். ராணுவ அணிவகுப்பின் போது அவரை வீழ்த்த நடந்த, பலத்த கண்டனத்துக்குரிய சதியில் அதிர்ஷ்டவசமாக அவர் உயிர் தப்பியதும் அவருடைய இமேஜைப் புதுப்பித்து மெருகேற்ற உதவலாம்.

ராஜீவ் — ஜெயவர்த்தன ஒப்பந்தம் வெற்றி பெற்று இலங்கையில் மெய்யான அமைதி ஏற்பட்டால் நம்மைவிட மகிழ்ச்சி அடையப் போகிறவர்கள் யாருமில்லை. ஆனால் இந்த ஒப்பந்தம் வெற்றி பெறுமா? சந்தேகமே.

முதலாவதாக, பிரச்னை, ஈழத் தமிழருக்கும் ஸ்ரீலங்கா அரசுக்கும் இடையில் உள்ள ஒன்று. நேற்று வரை இந்தியா மத்தியஸ்தம் செய்யும் பணியில்தான் ஈடுபட்டிருந்தது. எனவே, ஸ்ரீலங்கா அரசுக்கும் ஈழத் தமிழரில் பல பிரிவினருக்கும் இடையே ஏற்படும் ஒப்பந்தத்தில் இந்தியா பார்வையாளராக இருந்து, சாட்சிக் கையெழுத்து வேணுமானால் போட்டு மகிழலாம். ஆனால் இப்போது விசித்திரம் என்னவென்றால், ஒப்பந்தமே ராஜீவுக்கும் ஜெயவர்த்தனவுக்கும் இடையில் ஏற்பட்டிருக்கிறது! இது எப்படிப் பொருந்தும்?

'இது இந்தியாவுக்கும் இலங்கை அரசுக்கும் இடையிலான உடன்பாடு; எங்களுக்குச் சம்பந்தமுமில்லை, சம்மதமுமில்லை' என்று நாளைக்கே ஈழப் போராளிகளின் சில பிரிவினர் கூற வாய்ப்புண்டு. ஏற்கெனவே பிரபாகரன் முதல் நாள் வரவேற்ற ஒப்பந்தத்தை மறுநாள் நிராகரித்து, மீண்டும் ஏற்று மும்முறை குட்டிக்கரணம் அடித்து விட்டார். மறுபடி ஒரு பல்டி அடிக்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்?

தவிர, ஈழ அரசின் இந்த முடிவுக்குச் சிங்களவரிடையேயே பலத்த எதிர்ப்பு இருக்கிறது. திருமதி சிறிமாவோ, பிரேமதாஸா, அதுலத் முதலி முதலியவர்கள் பகிரங்கமாக எதிர்ப்புத் தெரிவித்து விட்டனர். வேறு பல மதச்சார்புள்ள அமைப்புக்களும் அவர்கள் பக்கம். ஜெயவர்த்தனவோ, நாடாளுமன்றத்தில் ஒப்பந்தத்துக்கு ஆதரவு கிடைக்கவில்லையென்றால் பொதுத் தேர்தல் நடத்தி மக்களிடம் கருத்துக் கேட்பேன் என்கிறார். இந்தச் சூழலில் இந்த ஒப்பந்தம் எப்படி, எந்த அளவுக்கு வெற்றி பெற முடியும்?

ஜெயவர்த்தன விரித்த ஒரு வலையில் ராஜீவ் விழுந்து விட்டார் என்று கருதுவோரின் எண்ணத்தில் அர்த்தமிருக்கிறது. காரணம், நாளை ஈழப் போராளிகள் மீண்டும் ஆயுதம் தாங்கினால் அவர்களை அடக்க இந்தியா இந்த ஒப்பந்தப்படி ஸ்ரீலங்கா அரசுக்கு உதவியாக வேண்டும். பிரபாகரன் கூறியது போல் போராளிகள் இனிச் சிங்கள ராணுவத்தை மட்டுமின்றி இந்திய ராணுவத்தையும் சமாளித்தாக வேண்டும்! ஈழப் போராளிகளுக்கு இந்தியாவில் தரப்பட்டு வரும் அடைக்கலம் இனி இராது. அவர்களுக்குப் பணம் தருவது, அவர்கள் இங்கே பயிற்சி பெற அனுமதிப்பது ஆகிய எல்லாம் ஒப்பந்தத்துக்கு விரோதமாகிப் போகும். தமிழ் ஈழப் போராளிகள், ஒப்பந்தத்தை மீறி நாளை ஆயுதம் தாங்கினால் அவர்களை இந்திய ராணுவத்தைக் கொண்டு அடக்கி ஒடுக்க வழி செய்யும் இந்த ஒப்பந்தத்தில் ராஜீவ் காந்தி கையெழுத்திட்டது ராஜதந்திரமேயல்ல. அதிகபட்சம் ஒரு தற்காலிகப் புகழை அவருக்கு ஈட்டித் தருவதுடன் கதை முடிந்து போகும் என்றுதான் அஞ்ச வேண்டியிருக்கிறது.









## ஏமாற்றமளிக்கும் எதிர்க்கட்சிகள்

சரண்சிங் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தது தவிர, மூன்று நாட்களாக நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சியினர் உருப்படியாக ஒன்றும் செய்யவில்லை. ராஜீவ் மீது வழக்குத் தொடர ஜனாதிபதி அனுமதி அளிக்காத போது; நாடாளுமன்றத்தில் இ. காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலம் இருக்கும் வரை ராஜீவைப் பதவி நீக்கம் செய்ய முடியாது என்கிற சூழலில்; ஏகப்பட்ட குற்றச்சாட்டுக்களைச் சுமந்து கொண்டிருக்கும் ராஜீவ், ஜனநாயக மரபுகளுக்குக் கட்டுப்பட்டுத் தாமாகவே ராஜினாமா செய்து தேர்தலைச் சந்திக்கத் தயாராக இல்லாத நிலையில் எதிர்க்கட்சிகள் என்ன செய்ய வேண்டும்? நாடாளுமன்ற விவாதங்களின் போது விவேகம் காட்டி, ராஜீவ் மீதுள்ள பல குற்றச்சாட்டுக்களையும் ஆதாரங்களுடன் ஊர் அறிய, உலகறிய பிட்டுப் பிட்டு வைக்க வேண்டும். மக்களிடம் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும். இதைச் செய்யாமல் ஆத்திரமடைந்து அமைச்சர் கரத்தில் உள்ள தாள்களைப் பிடுங்கி,அவைத் தலைவரின் அதிருப்திக்கு ஆளானதில் என்ன பிரயோஜனம்? ஒரே கலாட்டா செய்து அவை நடவடிக்கைகளை ஒத்தி வைக்க வாய்ப்பளிப்பதில் என்ன பயன்? நாடாளுமன்ற மக்களவையையே இவர்கள் பகிஷ்கரிப்பதால் என்ன லாபம்? இவற்றில் ஒரு ராஜதந்திரம் இருக்கிறதென்றால் அது நமக்குப் புரியவில்லை. இவர்கள் தங்கள் நோக்கத்தைத் தாங்களே தோற்கடித்துக் கொள்வதாகத்தான் தோன்றுகிறது!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# ஆதவன்

ஆதவனும் நானும் 'தீபம்' காரியாலயத்தை விட்டிறங்கி மவுண்ட் ரோடு ரவுண்டானா அருகில் நடந்து வந்தோம். அண்ணா சிலை அப்போது நினைக்கப்படக்கூட இல்லை.

''உங்களுக்கு இன்னும் வயதாகியிருக்கும் என்று நினைத்தேன்,'' என்று ஆதவன் சொன்னார்.

''எனக்கு நிறையவே ஆகிவிட்டது. ஆனால் நான்தான் உங்களை இன்னும் வயதானவராக எதிர்பார்த்தேன்,'' என்று பதில் சொன்னேன். அது 1967 ஆம் ஆண்டு. மிகக் குறுகிய இடைவெளியில் 'இண்டர்வியூ,' 'அப்பர் பெர்த்' என அவருடைய இரு பக்குவமிக்க சிறுகதைகளைப் படித்து, இவ்வளவு துல்லியமாகவும் சத்தியம் தொனிக்கவும் தற்கால இந்தியாவின் படித்த இளைஞர் மனத்தைச் சித்திரிக்க முடியுமா என்று வியந்திருக்கிறேன். அந்த முதல் சந்திப்புக்குப் பிறகு இந்த இருபது ஆண்டுகளில் அவர் மனிதனாகவும் எழுத்தாளனாகவும் ஒருமுறை கூட என் வியப்பையும் மதிப்பையும் பெறாமலிருந்ததில்லை.

இந்த இருபது ஆண்டுகள் எங்கள் இருவருக்கும் பலவிதத்தில் ஒரே மாதிரியாக இருந்துவிட்டது. பாத்திரங்கள் என்று எடுத்துக் கொண்டால் எங்கள் இருவர் படைப்புகளிலும் நிறைய ஆள் மாறாட்டம் ஏற்பட வாய்ப்பிருப்பதாகப் பலர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். ஆனால் 1960, 70 களில் இந்திய நகரங்களில் இளமைப் போதைக் கழித்த, படித்த மத்தியதர வர்க்கத்தினரின் பிரத்தியேக ஆசை அபிலாஷைகளையும், சோகங்களையும் நிராசைகளையும் ஆதவன் போல யாரும் தமிழில் பிரதிபலிக்க முடிந்ததில்லை.

ஆதவனுடைய படைப்பு ஒன்றில் திடீரென ஓர் இளைஞன் நினைப்பான்: ''குரு தத் கூடத் தற்கொலை செய்து கொண்டு போயாயிற்று. இனி நான் ஏன் இருக்க வேண்டும்?'' எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. இளம் வயதில் ஓர் உன்னதமான இலட்சிய நிலையில் இத்தகைய மனநிலையை யார்தான் அனுபவிப்பதில்லை? எந்தச் சுயநலக் கலப்பும் இல்லாத இந்த நிலைக்குப் புறவாழ்க்கையில் ஒரு பலனும் கிடையாது. ஆனால் இத்தகைய சோகமும் ஏக்கமும் ஒரு மனிதனின் உண்மையான பரிமாணங்கள் அல்லவா? குரு தத் ஒரு ஹிந்தி சினிமாப்பட டைரக்டர். அவருடைய படைப்புகளிலிருந்து ஒரு தோற்றம் அவரைப் பற்றி லட்சக்கணக்கானோர் மனத்தில் கெட்டிப்பட்டு அவர் திடீரென்று இறந்தவுடன் ஒருகணம் வாழ்க்கையே அர்த்தமற்றதாகத் தோன்றச் செய்துவிடுகிறதல்லவா! இந்தத் தோற்றமும் இப்படி நினைப்பதும் லௌகீக உலகிற்கு உதவாத 'ரொமான்டிக்' சாயைகள் என்று உதாசீனப்படுத்தலாம். ஆனால் அச்சாயைகள் மனத்தில் நேரும் போது மனிதன் எத்தகைய புனித தளத்திற்கு உயர்ந்து விடுகிறான்!

ஆதவனின் முதல் நாவலும் அவருடைய படைப்புகளில் சிகரம் போல இருப்பதுமான 'காகித மலர்கள்' ஒருவிதத்தில் அவர் குரு தத்திற்குச் செலுத்திய அஞ்சலிதான். குரு தத்தே 'காகித மலர்கள்' என்ற தலைப்பில் மிகுந்த ஆர்வத்தோடும் எதிர்பார்ப்புகளோடும் ஒரு திரைப்படம் எடுத்தார். அப்படத்திற்குப் பிறகு அதன் கதாநாயகன் போல குரு தத்தின் வாழ்க்கையும் சிதறுண்டு போயிற்று. ஆனால் ஆதவனுடைய நாவல் ஒரு சிறப்பான இலக்கியப் பயணத்தின் துவக்கமாயிருந்தது. ஆதவன் எழுதிய 'பழைய கிழவர் புதிய உலகம்' ஆண்டின் சிறந்த சிறுகதையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. 'கணபுதி ஒரு கீழ் மட்டத்து குமாஸ்தா' ரஷ்ய மொழியில் பெரும் பாராட்டு பெற்றது. அவருடைய பல கதைகள் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் வெளியாகித் தற்காலத் தமிழ்ப் படைப்பிலக்கியத்துக்கு மதிப்புக்குரிய இடம் வாங்கித் தந்திருக்கின்றன.

ஆதவனுடைய எழுத்து போலவே அவருடைய சுபாவமும் மென்மையானது. வாழ்க்கையெல்லாம் அவர் பிறருக்குச் செய்த சிறு சிறு தியாகங்கள் கணக்கற்றவை. சாதுவானவனைத் துன்புறுத்துவதில் களிப்படையும் வக்கிர குணமுடையவர்கள்பால் கூட அவருக்குப் பரிவுதான் இருந்தது.

திடீர்ச் சாவும் தற்கொலையும் இன்றையப் புனைகதைப் படைப்புகளில் அடிக்கடி வருவதுதான். ஆனால் ஆதவனுடைய கதைகளில் இவை சற்று அதிகமாகவே காணப்படுவதாக நான் நினைத்ததுண்டு. இந்தக் கற்பனைச் சாவுகள் படிப்பவர்களை ஓரளவு திடமனது உடையவர்களாக்க உதவும் என்று மனத்தத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆனால் 45 வயது கூட முடியாத போது, சிருங்கேரி புண்ணியத் தலத்தில் ஆற்றில் குளிக்கப் போனவர் சுழியில் சிக்கி இறந்தார் என்று ஜூலை இருபதாம் தேதி தகவல் கிடைத்தபோது திடமனதோடு இருக்க முடியவில்லை.

— அசோகமித்திரன்



# தாய்ப் பாலும் நஞ்சாகும்!

'**தா**ய்ப் பாலில் D.D.T!' என்ற தலைப்புச் செய்தி சில மாதங்களுக்கு முன்பு செய்தித் தாள்களில் அடிபட்டது. நாமும் அச்செய்தியைப் படித்துவிட்டு அதிர்ந்தோம். சில தினங்களில் அதை மறந்தும் போனோம்.

உணவுப் பொருட்களையும் தானியங்கள், பயிர் வகைகளையும் பாதுகாக்க உபயோகிக்கப்படும் பூச்சி கொல்லி மருந்துதான் உணவோடு மனித உடலுக்குள் சென்று, ரத்த ஓட்டத்தில் கலந்து, தாய்ப் பாலிலும் நுழைந்துவிடுகிறது. கைக்குழந்தைக்கு நோய்க் காப்புச் சக்தியை அளிக்கக் கூடிய இயற்கையான சத்துக்கள் அடங்கிய தாய்ப் பாலையே நஞ்சாக்கிவிட்ட பெருமை நவீன ரசாயனத்துக்கு உண்டு.

"இந்த மாதிரி, பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடியும்' கதைகள் பல. அமோக விளைச்சலுக்கும் பயிர் பாதுகாப்புக்கும் பயன்படுத்தப்படும் ரசாயனப் பொருட்களின் நச்சுத் தன்மை மனிதனையே பாதிக்கும் நிலை உருவாகக் காரணம், நாம் நவீன விஞ்ஞான, தொழில் நுட்ப முறைகளை இரண்டாம் யோசனை இன்றி அயல் நாட்டிலிருந்து கண்மூடித்தனமாக இறக்குமதி செய்வதுதான்'' என்கிறார்கள் பி.பி.எஸ்.டி. நிறுவனத்தினர். **Patriotic and People Oriented Science and Technology** நிறுவனத்தினைச் சேர்ந்த முகுந்தன் கூறினார்:

''விஞ்ஞான தொழில் நுட்ப முன்னேற்றத்தில் முன்னணியில்' உள்ள நாடுகள் என்ன முறைகளைக் கையாள்கின்றனவோ அவற்றையே நாமும் பற்றிக் கொள்கிறோம். நமது பாரம்பரிய விவசாய முறைகளை அடியோடு மறந்துவிடுகிறோம். உதாரணமாக இந்தியாவில் பலநூறு விதமான நெல் வகைகள் உண்டு. அவை இடத்துக்கு இடம் மாறுபடுகிற தட்ப, வெப்ப நிலைகளுக்கும் பாசன வசதிகளுக்கும் ஏற்ப அமைந்திருந்தன. அவற்றைப் புறக்கணித்துவிட்டுத் தாய்வனிலிருந்து ஐ. ஆர். வகைகளைத் தருவித்து விளைவிக்க ஆரம்பித்தோம். இவ்வகைகள் குறுகிய காலத்தில் பலனளித்தாலும், பூச்சிப் பொட்டுகளின் தாக்குதலுக்கு அதிகமாக உள்ளாயின. அதனால் அதிக அளவில் பூச்சிக் கொல்லி மருந்துகளைப் பயன்படுத்த வேண்டியதாயிற்று. நிகர லாபம்: உணவு மூலமே சிறிது சிறிதாக மனித உடலில் விஷம் ஏறுகிறது!

"விவசாயத் துறையில் மட்டுமின்றிப் பல் வேறு துறைகளிலும் இந்தியாவின் பாரம்பரிய முறைகள் மிக நவீனமாக இருந்திருக்கின்றன. தமிழகக் கிராமங்களில் சிறு சிறு எஃகாலைகள் அமைத்து நவீன முறையில் எஃகு தயாரிக்கப்பட்டு வந்ததற்கு வரலாற்றுச் சான்றுகள் உள்ளன.

"நமது பாசனத் திட்டங்களை எடுத்துக் கொண்டாலும் தன்நிறைவு நோக்குடன் அவை வகுக்கப்பட்டிருந்ததைக் காணலாம். ஒவ்வொரு கிராமத்திலும் சிறுசிறு குளங்கள், ஊருணிகள், கிணறுகள், ஒவ்வொரு வட்டாரத்திலும் ஏரிகள் என்று திட்டமிட்டு நமது முன்னோர்கள் அமைத்துள்ளார்கள். பருவ மழை தவறினாலும் இந்த நீர் நிலைகள் கைகொடுத்து வந்தன. ஆனால் நவீன பாசன முறைகள் வந்தபிறகு இந்நீர் நிலைகள் சீரழிய ஆரம்பித்தன. அவை தூர் வாரப்பட்டுச் சுத்தமாக இராததால் சில வருடங்களில் பெய்யும் உபரி மழையின் நீரைச் சேமிக்க இயலவில்லை. மழை பொய்த்தால் வறட்சியும் பஞ்சமும் ஏற்படுகின்றன.

''நமது பல்கலைக்கழகங்கள் உருவாக்கும் சிவில் எஞ்சினியர்கள் எல்லோரும் புதிய அணை கட்டுவதிலும் நவீன பாசனத் திட்டங்கள் தீட்டுவதிலும் மட்டுமே கவனம் செலுத்துகிறார்களேயொழிய ஏற்கெனவே உள்ள பழைய பாசன வசதிகளை மேம்படுத்தத் தங்கள் பொறியியல் அறிவைப் பயன்படுத்துவதில்லை. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் பி.பி.எஸ்.டி. ஓர் இயக்கத்தை ஆரம்பித்துள்ளது'' என்றார் முகுந்தன்.

நவீன முன்னேற்றத்தைப் புறக்கணித்துவிட்டுப் பின்னோக்கிப் போக முடியுமா என்று கேட்டபோது அவர் அவசரமாக மறுத்தார்:

''விஞ்ஞான தொழில் நுட்ப அறிவுக்கு எதிரிகள் அல்ல நாங்கள். அந்த அறிவை இந்திய சந்தர்ப்பச் சூழ்நிலைகளுக்கு ஏற்றபடி சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றுதான் வலியுறுத்துகிறோம்.''

— நமது நிருபர்



• அனைவரும் கைகோத்து சமாதானப் பாடலைப் பாடிய போது.....

லெபனானைச் சேர்ந்தவர் நிஜத் மொஹிதீன். நிஜத்தின் கணவர், பல்கலைக் கழகத்தில் புரொபஸராகப் பணியாற்றியவர் — கம்யூனிஸ்ட். ஐந்து வருஷங்களுக்கு முன்னால் ஒரு ஞாயிறு காலை, வீட்டில் இருந்தவரை போலீஸார் திடுமென வந்து கைது செய்து கொண்டு போனார்கள். அவர் செய்த குற்றம் என்ன? தெரியாது! எங்கு அழைத்துப் போனார்கள்? தெரியாது! யார் உத்தரவில் கைது செய்தார்கள்? தெரியாது! இப்போது அவர் எங்கே இருக்கிறார்? தெரியாது! ஐந்து வருஷங்களாகத் தலைவர்கள், அரசியல்வாதிகள், போலீஸ் அதிகாரிகள் என்று எல்லாரிடமும் முறையிட்டு விட்டு, விஷயம் கிணற்றில் போட்ட கல்லாக இருக்க, கடைசியாக ரஷ்யாவில் கூடிய அகில உலகப் பெண்கள் மாநாட்டுக்கு வந்து, அனைத்துலகப் பிரதிநிதிகளிடமும் கையெழுத்து வாங்கி, ஐக்கிய நாடுகள் சபையின் கவனத்தை ஈர்க்கும் பணியில் இப்போது ஈடுபட்டிருக்கிறார் நிஜத். மிக நீண்ட தாளைக் கையில் வைத்துக் கொண்டு ஒவ்வொருவரிடமாகக் கையெழுத்து வாங்கிக் கொண்டிருப்பவரைக் காண மனசு ஒருவித கையாலாகாத்தனத்தில் கனத்துத்தான் போயிற்று.

# மாஸ்கோ மாதர் மாநாடு: 154 நாடுகள் 2800 பெண்கள்!

சிவசங்கரி

இம்மாதிரியான அபூர்வப் பெண்மணிகள் பலரை நான் மாஸ்கோவில் இந்த மாநாட்டின் போது சந்திக்கும் வாய்ப்புப் பெற்றேன்.

நூற்று ஐம்பத்துநான்கு நாடுகளிலிருந்து இரண்டாயிரத்து எண்ணூறுக்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் இந்த அகில உலகப் பெண்கள் மாநாட்டில் கலந்து கொண்டனர். அந்த எண்ணிக்கையே ஒரு தலைசுற்ற வைக்கும் அனுபவம்: அத்தனை பிரதிநிதிகளையும் தங்க வைத்திருந்த சென்ட்ரல் டூரிஸ்ட், ஸல்யூட் என்கிற இரண்டு பெரிய ஹோட்டல்களுக்கும் தடபுடல் செக்யூரிடி. அவரவர் புகைப்படம்

கொண்ட பாட்ஜைப்போய் இறங்கியதுமே தந்து. "தயவு பண்ணி எப்போதும் இதை அணிந்திருங்கள்" என்று நிர்வாகிகள் சொல்லிவிட்டதில், குளிக்கும் நேரம் தவிர பாக்கி சமயங்களில் கழுத்திலிருந்து அது தொங்கிக் கொண்டேதான் இருந்தது; ஒவ்வொருதரப் வெளியே போய் வரும் போதும் பாட்ஜில் இருந்த படத்தையும், முகத்தையும் உற்றுப் பார்த்துத் திருப்தி அடைந்த பிறகே பாதுகாப்பு அதிகாரிகள் நம்மை ஹோட்டலுக்குள் விடுவர் என்றால், காவலின் கெடுபிடியை ஓரளவுக்குப் புரிந்து கொள்வது சாத்தியம்.




* மாநாட்டில் கலந்து கொண்ட உறுப்பினர்களுள் ஒரு பகுதியினர்.

மாநாடு தொடங்க ஒரு நாள் இருந்ததால், போய் இறங்கிய அந்தத் திங்கள் கிழமை மாஸ்கோவைச் சுற்றிக் காண்பித்தார்கள். பைலட் போலீஸ் அரசாங்கத்தின் விருந்தினர்கள் வருகிறார்கள் என்பதை மக்களுக்குக் கட்டியம்கூறும்தினுசில் சைரன் ஒலித்துக் கொண்டே முன்னால் போக, நாங்கள் ராஜ மரியாதையுடன் நகரத்தைச் சுற்றிப் பார்த்தோம்.

* மாஸ்கோ சாலைகள்



மாஸ்கோ, உலகத்தில் அழகான தலைநகரங்களில் ஒன்று. அதிக உயரமில்லாத சாம்பல், பழுப்பு நிற சதுரக் கட்டடங்கள். அகன்று நீண்ட சாலைகள். ஓரங்களில் 'பச்' சென்று எங்கு பார்க்கினும் குடைவிரிக்கும் பச்சை மரங்கள், அற்புதமான சிற்பங்கள், சரவிளக்குகளுடன் ஜொலிக்கும் மெட்ரோக்கள் (மின்வண்டி நிலையம்) என்று எங்கு நோக்கினும் மாஸ்கோ ரம்யமாக இருக்கிறது.



* ரஷ்ய தாத்தாவும் பேத்தியும்

அந்த நகரின் சாலைகள்! இந்தப் பக்கம் மூன்று வரிசை, அந்தப் பக்கம் மூன்று வரிசை! இடையில் சாரியாய் மரங்கள்! சைக்கிள், பாதசாரிகளுக்குத் தனி பாதை. மீண்டும் மர வரிசை! பிரதான சாலைகள் கிட்டத்தட்ட 150 அடி அகலம் இருக்கும்! எதிர்காலத்தை மனத்தில் கொண்டு ஐம்பது வருஷங்களுக்கு முன்னரே முன் யோசனையுடன் திட்டமிட்டு நிர்மாணிக்கப்பட்டவை!

"அணு ஆயுதங்கள் பற்றிய பயம் இல்லாத இருபத்தொன்றும் நூற்றாண்டை நோக்கி, சமாதானம், சமத்துவம், வளர்ச்சியுடன் பயணிப்போம்" — என்ற கருப்

பொருள் கொண்ட மாநாட்டை, தலைவர் மிசேல் கார்பசேவ் திறந்து வைத்தார். க்ரெம்ளின் மாளிகையினுள் நடந்த அந்தக் கோலாகலமான விழாவில், பங்கெடுத்த அத்தனை பிரதிநிதிகளும் ஒருவருடன் ஒருவர் கைகோத்து, மார்ட்டின் லூதர்கிங் பாடிப் பிரபலமான ''We shall overcome'' என்கிற சமாதானப் பாடலைப் பாடியதும், ஆயிரமாயிரம் குழந்தைகள் கைகளில் வெள்ளை கார்னேஷன் பூக்களை வைத்தபடி, ''எங்களை வாழ விடுங்கள்.... அணு ஆயுத பயங்கரம் இல்லாத எதிர்காலத்தைத் தாருங்கள் – தயவு பண்ணி நாங்கள் நிம்மதியாய் வாழ வழி செய்து தாருங்கள்'' என்று ஒரு சேர வேண்டியதும், சிறுவன் ஒருவன் ஓடிச் சென்று மிசேல் கார்பசேவிடம் பூக்களை நீட்ட, உணர்ச்சிவசப்பட்டுப் போன அவர் கண்களில் ததும்பிவிட்ட நீரைத் திரும்பி நின்று துடைத்துக் கொண்டதும், சபையிலிருந்த அத்தனை பேரும் அந்தச் சூழ்நிலையால் பாதிக்கப்பட்டதும் இதயத்தை நெகிழ்வித்த விஷயங்கள்.

அத்தனை பிரதிநிதிகளும் ஒரே இடத்தில் கூடிக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வது கஷ்டம் என்பதால், மாநாட்டைப் 'பெண்களும், சமாதானமும்', 'பெண்களும் குடும்பமும்', 'பெண்களும் பொது ஜனத் தொடர்பு சாதனங்களும்' – என்று எட்டு கமிஷன்களாகப் பிரித்து, யார் யாருக்கு எந்த தலைப்பில் ஈடுபாடு உள்ளதோ அதில் அவர்கள் கலந்து கொள்ளலாம் என்று அறிவித்திருந்தார்கள். நான் 'விமன் அண்ட் மாஸ் மீடியா'வில் பங்கு எடுத்து இரண்டு முறை பேசினேன். முதல் நாள் பத்திரிகை, சினிமா, டீ.வி.யில் பெண்கள் வியாபாரப் பொருட்களாகச் சித்திரிக்கப்படுவதைத் தடுப்பது எப்படி? என்பதைத் தலைப்பாகக் கொண்டு பல நாட்டவர்களும் காரசாரமாகப் பேசினார்கள். என் முறை வந்தபோது 'எழுத்தாளர் என்கிற ரீதியில் விபசாரம், மாடலிங், ஸ்ட்ரிப்டீஸ் செய்யும் பெண்களை நான் பேட்டி கண்டிருக்கிறேன். இவர்களில் சிலர் பொருளாதார அவசியத்துக்காக இத்தொழிலைச் செய்கிறார்கள். சிலர் அடுத்தவரின் கட்டாயத்துக்காகச் செய்கிறார்கள்; இன்னும் சிலர் தங்களுக்கு அழகான உடம்பு இருக்கிறது என்கிற பெருமிதத்தோடு விரும்பி இத்தொழிலை மேற்கொண்டிருக்கிறார்கள். ஆக, பெண்களே விரும்பியோ, அல்லது கட்டாயத்துக்காகவோ இந்தத் தொழில்களில் ஈடுபட்டிருக்கும்வரை நாமெல்லாம் நூறு மாநாடுகள் கூட்டித் தொண்டை கிழிய 'பெண்கள் வியாபாரப் பொருட்களாக, மட்டமாக நடத்தப்படுகிறார்கள்' என்று சத்தமிடுவதினால் எந்தப் பலனும் இருக்கப் போவதில்லை. ஆண்களின் முக க்ஷவர ப்ளேடு அல்லது ஆண்கள் அணியும் உள்ளாடை விளம்பரங்களில் கூடப் பெண் ஒருத்தியைத் தேவையில்லாமல் புகுத்தும் அளவுக்குக் கீழ்த்தரமாகத் தாங்கள் தாழ்த்தப்பட்டுவிட்டதை அதில் பங்கெடுக்கும் பெண்களே உணர்ந்தால் அன்றி, இந்த நிலைக்கு விமோசனம் உண்டாகாது. முதலில் பெண்களுக்குத் தன்னம்பிக்கை, சுயமரியாதை உண்டாக வேண்டும். அந்த விழிப்புணர்வைத் தோற்றுவிப்பதில் மாஸ் மீடியாவின் பங்கு அதிகமானது; இதனோடு கன்ஸுமர் ரெஸிஸ்டென்ஸ் என்று சொல்லக் கூடிய 'வேண்டாததைக் கூட்டாகத் தவிர்க்கும்' நடவடிக்கையைச் சமுதாயத்தினர் மேற்கொண்டு, வலிக்கிற இடம் பார்த்து அடிக்க வேண்டும். சினிமா, பத்திரிகை எதுவானாலும் பொருளாதார நஷ்டத்தை மீறிச் செயல்பட முடியாது. இப்படி, ஒரு பக்கம் சுயமரியாதை குறித்து விழிப்புணர்வு, இன்னொரு பக்கம் சம்பந்தப்பட்டவர்களுக்குப் பொருளாதார நஷ்டம் தரக் கூடிய கன்ஸ்யூமர் ரெஸிஸ்டென்ஸ் – இவ்விரண்டையும் திட்டமிட்டுச் செய்வது ஒன்றுதான் இந்தப் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு' என்று நான் கூறியதும் எழுந்து நின்று கை தட்டி என் கருத்துக்களை இதர பிரதிநிதிகள் வரவேற்றனர்.

கடைசி நாள் 'மாஸ் மீடியா உலக சமாதானத்துக்காக என்ன செய்ய வேண்டும்' என்கிற கருத்தரங்கில் மீண்டும் நான் பேச அழைக்கப்பட்டேன். ''அமைதிக்காக நோபல் பரிசு பெற்ற அன்னை தெரசாவைச் சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டியுள்ளது. போர் பயம் இன்றி, வருங்காலச் சந்ததியினர் நிம்மதியாக வாழ வேண்டுமென்றால் அதற்கு அன்பு ஒன்றுதான் வழிகாட்டும். 'Love can do wonders my child' என்று அவர் சொன்னதை இங்கு நான் நினைவு கூர விரும்புகிறேன். 'வல்லரசுகளிடம் அணு ஆயுதத் தயாரிப்பை நிறுத்துங்கள்; போரை விட்டொழியுங்கள்' – என்று வேண்டுகோள் விடுக்கும் அதே சமயத்தில் நம்மால் இது குறித்து என்ன செய்ய இயலும் என்பதையும் நாம் சிந்திக்க வேண்டும். தனி மனிதர் பலர் ஒன்று சேருவதுதான் சமுதாயம். பல சமுதாயங்கள் ஒன்று படுவது தான் உலகம்.... ஆக, நிலையான மாற்றம் ஏதேனும் வரவேண்டும் என்றால், அது தனி மனிதரிடம் தொடங்கினால்தான் ஆக்கபூர்வமாக இருக்க முடியும்....'இன்று இருப்பதை விடச் சிறந்த பிரஜையாக, மனிதராக வாழ வளர நாளை முதல் முயற்சி செய்வேன்' என்கிற சபதத்தை நமக்கு நாமே எடுத்துக் கொண்டு தனி மனித விழிப்புணர்வு மூலம் சமுதாய மேம்பாட்டுக்குப் பாடுபடலாம். காந்திஜி ஜனித்த நாட்டிலிருந்து வந்திருக்கும் எனக்கு உலகத்தில் சமாதானம் பூரணமாய் நிலவ, அன்பு, அக்கறை, மனிதாபிமானம் இவைகளை இழக்காமல் நாம் இருப்பது ஒன்றைத் தவிர வேறு உபாயம் இருப்பதாகத் தெரியவில்லை''.

நாலு நிமிஷங்களில் சொல்ல நினைத்ததைச் சொல்லி நான் உட்கார்ந்ததும், பிரிட்டனைச் சார்ந்த பிரதிநிதி என்னை அணைத்து, கன்னத்தில் முத்தமிட்டு, ''உங்கள் உரை என் கண்களில் நீரை வரவழைத்துவிட்டது.



கடவுள் உங்களை ஆசிர்வதிப்பார்'' என்று கூறியது. அன்றைக்கு எனக்குக் கிடைத்த பாராட்டுக்களில் மறக்க முடியாதது.

**மா**நாட்டில் பல தரப்பட்ட பெண்களைச் சந்தித்தேன். அவர்களில் ஒருவரை இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சந்தித்தீர்கள். இன்னொருவரை இப்போது உங்களுக்கு அறிமுகப்படுத்த விரும்புகிறேன்.

*லைலா காலித்* — 1969, 70—ல் இரண்டு முறைகள் விமானங்களைக் கடத்தினாரே, அந்தப் 'புகழ்' பெற்ற பாலஸ்தீனிய டெரரிஸ்ட் லைலா காலித்தான்! தனது பதின்மூன்றாவது வயதில் தீவிரவாதியாக மாறி, பாலஸ்தீனியரின் விடுதலைக்காகப் பாடுபடும் லைலாவிடம் நான் கேட்ட கேள்விகளும் அவர் கூறின பதில்களும்.....

நான்: உங்கள் இளமைப் பிராயத்தைப் பற்றிக் கூறுங்களேன்....

*லைலா:* சிரமமான குழந்தைப் பருவத்தைத் தவிர நான் வேறு எதையும் அனுபவித்ததில்லை. நிலையான இடம் என்று எங்களுக்கு எதுவும் இல்லாத காரணத்தால் இங்கும், அங்குமாய்ப் பந்து போல உதைபட்டிருக்கிறேன். லெபனனில் சில வருஷங்கள், இஸ்ரேலில் சில வருஷங்கள்... தலைமறைவாகப் பல வருஷங்கள்.... நாங்கள் எல்லாம் நாடு இல்லாத அனாதைகள்.... தீவிரவாதிகளாக மாறின பிறகே உலகத்தின் கவனம் எங்கள்பால் திரும்பியது.

நான்: விமானத்தைக் கடத்தின அனுபவம் பற்றி....

*லைலா:* திட்டங்கள் பற்றி விரிவாகக் கூற இயலாது. மன்னியுங்கள். ஆனால் நான் நேரடி பங்கெடுத்தது இரண்டு தரம். முதல் முறை 1969—ல் ரோமிலிருந்து டெல்அவிவ் செல்ல இருந்த TWA விமானத்தைக் கடத்தி டெமாஸ்கஸுக்குக் கொண்டு சென்றோம். இரண்டாவது தடவை, இஸ்ரேல் விமானத்தை 1970—ல் ஆம்ஸ்டர்டாமுக்குக் கடத்தத் திட்டமிட்டோம். இஸ்ரேல் ராணுவத்தினர் எங்களை ஆக்ரமித்து, என் தோழனைக் கொன்று, என்னைச் சுட்டு மடக்கிவிட்டனர். எங்கள் திட்டம் தோல்வி அடைந்தது. என்னைக் கைதாக்கி லண்டனுக்கு அழைத்துப் போனார்கள். ஆனால், சரியாக நாலாம் நாள் எங்கள் இயக்கத்தினர் ஒரு பிரிட்டிஷ் விமானத்தை வெற்றிகரமாகக் கடத்தி அதை விடுவிக்க வேண்டுமென்றால், பதிலுக்குப் பிரிட்டிஷார் என்னை விடுதலை செய்ய வேண்டும் என்று நிபந்தனை போட, நான் விடுதலையானேன்.

நான்: இரு நாடுகளுக்கிடையேயுள்ள பகையின் காரணமாக ஒன்றுமே அறியாத அப்பாவிப் பொதுமக்களைப் பகடைக் காய்களாக்குவது உங்களுக்கு நியாயமான செயலாகப் படுகிறதா?

*லைலா:* என்ன செய்வது? நாங்கள் பாலஸ்தீனிய விடுதலைக்காகப் போராடுகிறோம். இது நியாயத்துக்கான போராட்டம். லட்சியத்தை நோக்கிப் பயணிக்கையில் சிலரைப் பலியாகக் கொடுப்பது தவிர்க்க முடியாததாகிவிடுகிறது. கூடுமானவரையில் மனிதாபிமானத்துடன் இருக்கவே நாங்கள் விரும்புகிறோம்.

நான்: தீவிரவாதி என்று பெயர் வாங்கிய நீங்கள் இப்படி பகிரங்கமாக மாநாட்டில் கலந்து கொள்கிறீர்களே.... உங்கள் உயிருக்கு ஆபத்து வாராதா?

*லைலா:* நான் வந்திருப்பது ரஷ்யாவுக்கு. இங்கிருக்கும்வரை எனக்கு எந்தப் பயமும் இல்லை...

*லைலா* தற்சமயம் ஸிரியாவில் வசிக்கிறார். இவருக்குத் திருமணமாகி ஐந்து வயதில் ஒரு குழந்தை இருக்கிறது.

**லை**லாவைச் சந்தித்த அரைமணிக்கெல்லாம் மதிய விருந்தின்போது புனுவி விருந்து மாநாட்டில் பங்கெடுக்க வந்திருந்த திருமதி கிராண்டிடம் எதேச்சையாய் என் அனுபவத்தைக் கூற, அவர் பாதிச் சாப்பாட்டில் ''எங்கே அந்த லைலா? எனக்கு அறிமுகப்படுத்துங்கள்! சென்ற செப்டம்பர் மாசம் பாலஸ்தீனியர்களால் கடத்தப்பட்ட பான்ஆம் விமானத்தில் நானும் என் கணவரும் இருந்தோம். அப்பாவி மக்கள் 22 பேர்கள் அநியாயமாய்க் கொலை செய்யப்பட்டதை என் கண்ணால் பார்த்து அதிர்ந்தேன். இதுவா சுதந்திரப் போராட்டம்? முதலில் அந்த லைலாவைப் பார்த்து ஒரு உலுக்கு உலுக்கிவிட்டுத்தான் மறு வேலை...'' என்று கையை உதறிக் கொண்டு எழுந்துவிட்டார். லைலாவை அவர் பார்த்தாரா, இல்லையா என்று எனக்குத் தெரியாது. ஆனால், விமானக் கடத்தல் என்ற ஒரே அம்சத்தை இரண்டு அழுத்தமான மாறுபட்ட கண்ணோட்டங்களிலிருந்து பார்க்க முடிந்தது குறித்து அன்றும், அதைத் தொடர்ந்து வந்த நாட்களிலும் நான் சிந்தித்துக் கொண்டேதான் இருந்தேன்.

**மா**நாடு முடிந்ததும் சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட சிறுவர்கள் அற்புதமான கலைநிகழ்ச்சி ஒன்றை ஒன்றரை மணி நேரத்துக்கு அளித்து, எங்களைப் பிரமிக்கவைத்தார்கள். அது என்ன கட்டுக்கோப்பு! கண் சிமிட்டும் நாழிகையில் காட்சி மாற்றங்கள்! சாவி கொடுத்த பொம்மை மாதிரி இரண்டு வயசு குழந்தை கூட தாளத்தோடு ஆடும் நேர்த்தி! அளவெடுத்த மாதிரி ஐந்நூறு குழந்தைகள் ஒரே சமயத்தில், ஒரே விதத்தில் ஆடிய கூட்டு ஆட்டங்கள்! அடடா... விவரிக்க வார்த்தை இல்லை போங்கள்... இந்த மாதிரி குழந்தைகளைத் தயார் பண்ணுவது எப்படிச் சாத்தியமாயிற்று? நிர்வாகி ஒருவரிடம் கேட்டபோது அவர் ''பள்ளியில் படிக்கும் நாட்களிலேயே கலைகளில் ஈடுபாடு உள்ள குழந்தைகளுக்கு சிறப்புப் பயிற்சி அளித்து வருவோம். ஒவ்வோர் ஆண்டும் சில ஆசிரியர்கள் நாடு முழுவதும் பயணித்துக் கிராமத்தில் இருக்கும் பள்ளிகளுக்குக் கூட விஜ

யம் செய்து எந்தெந்தக் குழந்தை எந்தெந்த அம்சத்தில் அதிக ஈடுபாட்டுடன் இருக்கிறது என்று தேடுவார்கள். விளையாட்டு, பாட்டு, நாட்டியம், என்று ஒவ்வொன்றிலும் தனிச் சிறப்போடு விளங்கும் குழந்தைகளைத் தேர்ந்தெடுத்து, பெற்றோரிடம்பேசி, அந்தப்பிரிவுக்கென விசேஷமாய் இயங்கும் பள்ளிகளில் சிறப்புப் பயிற்சி பெற அனுப்புவார்கள்'' என்றார்.

"ரஷ்யாவின் 'க்யூ' உலகப் பிரசித்தி ஆயிற்றே! உன் அனுபவம் எப்படி?'' என்று வந்து இறங்கியதும் என்னைச் சில நண்பர்கள் வினவவே செய்தனர். ரஷ்யாவில் எதற்கெடுத்தாலும் மனிதர்கள் க்யூ வரிசையில் நிற்பது அதிகமாகத்தான் உள்ளது. ஆனால், பற்றாக்குறையின் காரணமாய் இந்த 'க்யூ' இருக்கிறதாக எனக்குத் தோன்றவில்லை. நம் ஊரில் தெருவுக்கு ஒரு மளிகை, காய்கறிக் கடை உள்ளது போல அல்லாமல் மாஸ்கோவில் பத்து இருபது தெருக்களுக்கு ஒரு கடை இருப்பதே இந்த க்யூவுக்குக் காரணம் என்று நான் நினைக்கிறேன். மேலும் ஒவ்வொரு ரஷ்யருக்கும் உண்ண உணவு, உடுக்க உடை, தங்கும் இடத்தை வெகு சிறப்பாகக் கொடுத்திருக்கும் அரசாங்கம், தினுசு தினுசாக உணவு உண்ணும், உடை உடுத்தும் ஆசைகளைத் தேவையற்ற ஆடம்பரமாகவே கருதுகிறது.

வீட்டுக்கு வீடு கலர் டி. வி., டெலிபோன், ஐஸ் பெட்டி முதலியன காணப்பட்டாலும் வி. ஸி. ஆர். அங்கு ஆடம்பரப் பொருளாகவே இன்றும் கருதப்படுகிறது. அமெரிக்காவில் காணப்படுவது போன்று நூறு தினுசு ரொட்டி வகையறு, உருளை சிப்ஸ் ரகங்கள், ஐஸ்க்ரீம் போன்றவை கண்டிப்பாய் இல்லைதான். ஆனால் மாமிச உணவு, தயிர், பால், சிலகாய்கறிகள், பழவகைகள் என்று சத்தான உணவுப் பொருட்களை அந்த நாட்டில் ஒவ்வொருவரும் வயிறாரச் சாப்பிடுகிறார்கள். உதாரணமாக நிகோலே, டான்யா என்ற தம்பதியின் இல்லத்துக்கு நான் சென்றிருந்தேன். இருவருமே என்ஜினியர்கள். இருவருக்குமாய்ச் சேர்த்து உத்தேசமாக நானூறு ரூபிள் மாதச் சம்பளம். மூன்று படுக்கை அறைகளைக் கொண்ட பிளாடின் வாடகை, டெலிபோன், காஸ், மின்சாரம் இவை அனைத்துக்குமாய் மாதம் முப்பது ரூபிள்களையே அத்தம்பதி கொடுக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டதும் நான் மயக்கம் போடாத குறைதான். நிகோலே, டான்யாவுக்கு இரண்டு குழந்தைகள். இவர்களுடன் டான்யாவின் அப்பா வழிப் பாட்டியும் கூடவே இருக்கிறார். மூன்று படுக்கை அறைகளில் பெரியதும், நேர்த்தியானதுமான அறை, பாட்டியுடையதுதான்!

ரஷ்யாவில் பல குடும்பங்களில் பாட்டி, தாத்தாக்கள், பெற்றவர்கள் கூட்டாக வாழ்வது சகஜமாக உள்ளது. ''பெரியவர்களை அவர்களது வயதான காலத்தில் காப்பாற்றுவது குழந்தைகளின் கடமை என்பதைச் சின்னப் பிராயம் முதற்கொண்டே சொல்லிக் கொடுத்து, ரத்தத்தில் கலக்க வைத்து விடுகிறோம்'' என்றார் மொழி பெயர்ப்பாளரான நீனு.

ரஷ்யாவில் ஆண்களோடு பெண்கள் குடிப்பதும் அதிகமாகிவிட்டதை உணர்ந்து இதைத் தடுத்து நிறுத்தப் பலமுனைத் தடுப்பில் மிகேல் கார்பசேவ் இறங்கி இருக்கிறார். (1) 'வாட்கா' என்கிற பானத்தின் விலையை 3 ரூபிளிலிருந்து 12 ஆக உயர்த்தி (2) வாட்கா தயாரிப்பைப் பாதியாய்க் குறைத்து (3) 'பார்'களில் குடிக்கும் நேரத்தைச் சுருக்கி (4) ஞாயிற்றுக்கிழமையில் குடிக்கக் கூடாது என்று சட்டம் கொணர்ந்து (5) மீறுபவர்களைக் கடுமையாய்த் தண்டித்து (6) குடியர்களாக மாறிவிட்டவர்களை மீட்கப் புதிய க்ளினிக்குகளைத் திறந்து... இப்படிப் பல முனைகளிலிருந்தும் தாக்குதல் நடத்தும் மிகேல் கார்பசேவ் ஊருக்கு உபதேசி மட்டும் அல்ல. மதுவை விரலால் தொடாதவராக இருந்து முன் உதாரணமாகத் திகழ்கிறார்.

ரஷ்யாவின் அரசாங்க விமானப் போக்குவரத்தான ஏரோ ஃப்ளோட் ஒரு திருஷ்டிப் பரிகாரமாக இயங்குவதை அரசாங்கம் ஏன் புரிந்து கொள்ளவில்லை என்பது எனக்கு ஆச்சரியத்தைத் தந்த சமாசாரம்! போகும் போதும் சரி, வரும்போதும் சரி, மகா மட்டமான கவனிப்பு, தலைகாணி கேட்டால் இல்லை... காப்பி? 'இல்லை', குடிக்க வெந்நீர்? நாலு தரம் கேட்ட பிறகு வெத வெத ஒரு க்ளாஸ்! முன்னேற்பாட்டுடன் சைவ உணவுக்காக எழுதியிருந்தும் 'சைவமா? ம்ஹூம் இல்லை' என்று பட்டென்று பதில். ஒரு 'ஸாரி?' ஓர் இதமான புன்னகை? ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை. உடனடியாய் ஏரோ ஃப்ளோடின் சர்வீசை ரஷ்ய அரசாங்கம் கவனித்துச் சீர் செய்யாவிட்டால் இலவசமாகப் பயணிக்கக் கூப்பிட்டாலும் பாதி பேர்களுக்கு மேல் 'ஐயோ வேண்டாம்' என்று ஓடி விடுவார்கள் — நிச்சயம்!

பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பிய என்னைச் சந்திக்க வந்த நண்பர்கள், "அமெரிக்கா, ரஷ்யா ஆகிய இரு நாடுகளுக்கும் போய் வந்து விட்டாய்! இரண்டு நாடுகளில் ஏதேனும் ஒன்றில் வசிக்க வாய்ப்புக் கொடுத்தால், எந்த நாட்டைத் தேர்ந்தெடுப்பாய்?'' என்று கேள்வி கேட்டபோது —

''ரஷ்யாவிலிருந்து சில நல்ல பழக்கங்களை, அமெரிக்காவின் சில நல்ல குணங்களை எடுத்துக் கொண்டு என் தாய் நாடான இந்தியாவை வளப்படுத்தி அதில் ஆயுசு பர்யந்தம் வாழவே நான் விரும்புகிறேன்...'' என்றேன்.

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

**உயர் வட்ட ரசிகர்களுக்கு**
**உயர் வளமுள்ள தேயிலை**




# சக்கரா டீ



டாட்டா டீ லிமிடெட்
உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

# நிற்க நிழல் வேண்டும்



வாஸந்தி

சென்ற வாரம்:

இலங்கையில் தமிழ் இளைஞன் ஜயசீலனைச் சந்திக்கிறான் பிரபு என்ற இந்தியப் பத்திரிகையாளன். சிங்கள ராணுவத்தின் இரக்கமற்ற தாக்குதலுக்கும், பயங்கரவாதச் செயல்களுக்கும், விடுதலை இயக்கங்களின் சுதந்திர வெறிக்கும் இடையே சிக்கிக் கொண்டு இலங்கைத் தமிழர்கள் அவதியுற்றுத் தவிப்பதை ஜயசீலன் மூலம் அறிகிறான் பிரபு. ஜயசீலன் வீட்டின் அருகே வசிக்கும் வரதநாதன் என்ற இளைஞன் ராணுவத்தால் கைப்பற்றப்பட்டு, அவர்களிடமிருந்து தப்பி வந்து தனக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை விவரிக்கிறான். அப்போது திடீரென்று சிங்கள விமானப் படை தாக்குகிறது. எல்லோரும்



**ஓடி. கிடங்குகளுள் பதுங்கிக் கொள்கிறார்கள். தாக்குதல் முடிந்ததும் பிரபு இடிபாடுகளை, போட்டோ எடுக்க ஆரம்பிக்கிறான். ஜயசீலன் அவனை வற்புறுத்தி மறைவிடத்துக்குக் கூட்டிச் செல்ல முனையும் போதே ஒரு ராணுவ லாரி வரும் ஓசை கேட்க, இருவரும் தலைதெறிக்க ஓடுகிறார்கள்.**

## 2

திரும்பியே பாராமல் இருவரும் ஓடினார்கள். ஒதுங்கவோ பதுங்கவோ வழியில்லாமல் தெருவில் இருந்த, கடைகளும் வீடுகளும் இழுத்து மூடப்பட்டிருந்தன. அடுத்தாற்போல் கே.கே.எஸ். வீதி. ராணுவக்காரர்களிடமிருந்து தப்ப முடியாது. சிவன் கோவிலருகில் காம்ப் இருந்தது.

மூளை இயங்காத வெறிபிடித்த ஓட்டத்தில் மார்பு ஒரேயடியாய்ப் படபடத்துக் கண்கள் இருண்டு போயின.

சுரீரென்று முழங்காலுக்குக் கீழ் ஏதோ தாக்கி ரணமாய் வலித்தது. குண்டா, கண்ணாடிச் சில்லா என்று யோசிக்க நேரமில்லாமல் ஜயசீலன் வீதியின் பின் சந்துக்குள் ஓடினான். பிரபு பின்தொடர.

இருவருமாக மூச்சிரைக்க ஓடி வெறிச்

சோடிக் கிடந்த ஒரு வீட்டுக் கொல்லையின் இடங்கைத்தேடி அதனுள் அவசரமாகநுழைந்தார்கள்.

காலில் வெட்டுக்காயம் போல்தான் தெரிந்தது. வழியும் ரத்தத்தைத் துடைக்கக் கூடத் தோன்றாமல் நின்ற நிலையில் சாய்ந்து கண்ணை மூடி ஆசுவாசப்படுத்திக் கொண்டான். மீண்டும் கண்ணைத் திறந்த போது பிரபு முகத்தில் வேதனை தெரிய, இடது புஜத்தைப் பிடித்தபடி இருந்தான். பிடித்த இடத்திலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

"ஷெல்லடியா?"

தெரியவில்லை என்பது போல் பிரபு உதட்டைப் பிதுக்கினான். பிறகு இலேசாகப் புன்னகை செய்து, "இங்கேயிருந்து தப்பிப் பிழைக்கப் போறேமோ இல்லையோ தெரியல்லே! ஒரே ஒரு விஷயம் சொல்லிடு ஜயசீலன். அந்தச் சீலியா யாரு? உன் மனைவியா?" என்றான்.

ஜயசீலனுக்குப் பொறுமை போயிற்று.

"உமக்கு ஏனய்யா இந்த வம்பு?" என்றான் அலுப்புடன். "நான் கதைச்சா எழுதுவீர்! அதனாலே எனக்கு என்ன லாபம்? எங்க கரைச்சல் உமக்குப் புரியுமா? இங்கே எல்லாத் தமிழருக்கும் இப்ப ஒரேவிதமான சரித்திரம்தான். சொந்தமில்லே, பந்தமில்லே, வீடில்லே, வாசலில்லே. எனக்கு வயது இருபத்திநாலு. ஆனால் நான் சன்யாசியா இருக்கணும். — இயற்கையா ஒரு பெண்ணண்டை பிரியம் வைக்க உரிமையில்லே. ஏன்னா என் வாழ்க்கை எனக்குச் சொந்தமில்லே — அது ஆமிக்கோ, இயக்கக் காரங்களுக்கோ சொந்தம். எதுக்கு இந்தத் தண்டனைன்னு இண்டைக்கு எந்தத்தமிழனுக்கும் விளங்கல்லே!"

அதற்குமேல் தாங்காதது போல் ஜயசீலனின் கண்களிலிருந்து நீர் பெருகிற்று.

பிரபுவின் முகத்தில் சங்கடம் தெரிந்தது. ஜயசீலனின் தோளைத் தட்டி "ஸாரி ஜயசீலன். இனிமேல் உன்னைக் கேள்வி கேட்டுத் தொந்தரவு படுத்த மாட்டேன்," என்றான்.

"ஸாரின்னு சொன்னேனே ஜயசீலன்! உன் மனசைப் புண்படுத்தணும்னு நிச்சயமா நான் நினைக்கல்லே. உண்மையிலேயே உங்க நிலைமையை நினைச்சு நான் பரிதாபப்படறேன்!"

"அட போமய்யா! நீர் பரிதாபப்பட்டு என்ன ஆகும்?"

"நீ இப்படிச் சோர்ந்து போகக் கூடாது ஜயசீலன்!"

"ஆஹா! இது நல்ல ஹாஸ்யம்!"

"உண்மையா சொல்றேன். இங்க நிலைமை எவ்வளவு மோசம்ங்கறது வெளி உலகத்துக்குத் தெரிஞ்சா சிங்கள அரசு..."

"ஆ, அந்த அரசியல் பேச்சு வேண்டாம். இரண்டு வித அரசியல்னாலேதான் எங்களுக்கு மெத்தக் கரைச்சல். எங்களுக்கு இரண்டுபக்கமும்இடிபாடு.ஒண்ணும்கிடைக்காத நிலையிலே தலைமைப் பீடத்துக்குத் தங்களுக்குள்ளே சண்டை போட்டுக் கொள்கிற போராளிக் கும்பல். யாரையும் தட்டிக் கேட்க ஆளில்லை. ஆர்மியிடமிருந்து தப்பினாலும் இவனிடமிருந்து தப்ப இயலாது. இவன்மேல்இருக்கிறகோபத்திலே ஆர்மி போடற குண்டு நம்ம மேலதான் விழும்."

இருள் இப்பொழுதே விரிய ஆரம்பித்திருந்தது. ஊரடங்குச் சட்டத்தினால் தெருவில் ஈ, காக்கை இல்லை. இருவரும் பதுங்கிப் பதுங்கி நடந்தார்கள்.

அவர்கள் மேற்கொண்டு பேசாமல் வெகு ஜாக்கிரதையாக நடந்தார்கள். வீதியைப் பார்த்தபடி இருந்த ஓர் அடக்கமான வீட்டுக் கதவை ஜயசீலன் தட்டினான்.

"பயம் வேண்டாம், நான்தான் ஜயசீலன்" என்றான் கதவிடுக்கில் வாயைக் கொடுத்து.

உள்ளிருந்தவர் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து உறுதி செய்து கொண்ட பின் கதவு திறந்தது.

தலை நரைத்த ஒரு பெரியவர் கதவுக்கப்பால் நின்றிருந்தார். அவர்கள் உள்ளே நுழைந்ததும் சடக்கென்று கதவைத் தாளிட்டார்.

உள்ளே வாருங்கள் என்று அவர் சொல்லாததையும் கண்களில் நிழலாடும் சந்தேகத்தையும் கவனித்து ஜயசீலன்:

"இவர் நமக்கு வேண்டிய ஆள்தான்." என்றான். "இந்தியாவிலேர்ந்து வந்திருக்கிற பத்திரிகையாளர்."

அவரது முகத்தின் இறுக்கம் லேசாகத் தளர்ந்தது. வணக்கம் என்கிற பாவனையில் கைகுவித்தார் பிரபுவைப் பார்த்து.

உள்ளேயிருந்து ஒரு நடுத்தர வயது அம்மாள் எட்டிப் பார்த்தாள்.

"ஜயசீலனா?" என்றபடி வெளியே வந்தாள். "எப்படியிருக்கீர்?"

"எப்படியிருக்கேன்?" என்று ஜயசீலன் சிரித்தான். "நான் செத்துப் போய் ரொம்ப நாள் ஆச்சு."

பெரியவர்கள் சங்கடமான மௌனத்தில் நின்றார்கள்.

"ஏதாவது தகவல் கிடைத்ததா?" — சந்தேகமான குரலில், என்ன பதில் கிடைக்குமோ என்கிற அச்சத்துடன் கேட்டான் ஜயசீலன்.

பெரியவர் உதட்டைப் பிதுக்கித் தலையை அசைத்தார்.

அவன் தலையைக் குனிந்து கொண்டான். மூன்று மாதங்களாகக் கிடைக்கும் அதே பதில் —

அவன் சோர்வுடன் தலைநிமிர்ந்து "என்ற பக்கத்து சனத்திலே ஒரு பொடியனை ஆமி மூணு நாள் முன் கொண்டுட்டுப் போச்சு. இண்டைக்குப்பொடியன்வழுக்கிட்டுவந்துட்டான்."

பெரியவர் பெருமூச்சு விட்டார்.

"அவனவன் அதிர்ஷ்டம் அது!"

பேச்சைக் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்த பிரபு கேட்டான். "இவங்க

வீட்டிலே யாரையாவது ராணுவம் எடுத்துட்டுப் போச்சா?''

''எங்கட மகளைத் தம்பி!'' என்றாள் அந்த அம்மாள் குரலில் நீர்முட்ட.

''ஸ்கூல்லே டீச்சராயிருந்தாள். ஒரு நாள் வீட்டுக்குத் திரும்ப இல்லே. ஆமிதான் கொண்டிட்டுப் போயிருக்கணும்.''

''ஏன்?''

எல்லாரும் மௌனமாக நின்றார்கள் அந்தக் கேள்வியே காதில் விழாதது போல.

''ஜோஸஃப் எங்கே?'' என்றான் ஜயசிலன் பரபரப்புடன் — திடீரென்று ஞாபகம் வந்தவனாய்.

''இந்தியாவுக்கு அனுப்பிட்டம், அகதி முகாமுக்கு!'' என்றார் பெரியவர் சோர்ந்த குரலில். ''எங்கேயாவது உயிரோடு இருக்கட்டும். இங்கே படிப்பும் நின்னுப் போச்சு. அங்கே முகாமிலே பள்ளிக்கு அனுப்பறாங்களாம். எங்களுக்குப் பரவாயில்லே, யாழ்ப்பாணத்திலே செத்தாலும், சீவிக்கிற ஆசையும் இல்லே. சீலியா திரும்பி வந்தால் இங்க வருவா என்கிற ஒரு ஆசைதான்.''

பிரபு நிமிர்ந்து உட்கார்ந்தான். அதைக் கவனிக்காதவன் போல் ஜயசிலன் அவர்களையே யோசனையுடன் பார்த்தான்.

''ஜயசிலன்!'' என்றாள் அந்த அம்மாள் மெல்ல. ''நீர் இங்கே இருக்க இருக்க ஆபத்துதான். இந்தியாவுக்குப் போறதுதான் நல்லது. இனி இங்கே கனத்த கலவரம்தான். அதில் ஏன் வீணாகச் சாகணும்?''

''நான் எப்பவோ செத்துப் போயாச்சு.''

''இப்படிக் கதைக்கிறதிலே ஒரு லாபமுமில்லே. ஒரு யோசனை எங்களுக்கு. சீலியா ஒருவேளை வழுக்கிட்டுப் போய் இந்திய அகதி முகாம்லே இருக்கலாம் இல்லே?''

ஜயசிலன் சரேலென்று நிமிர்ந்து பார்த்தான்.

''எப்படி? போட்டுக்குப் பணம்? தனியா போயிருப்பாளா?''

''கழுத்திலே தங்கச் சங்கிலி போட்டிருந்தா. அவளுக்கு என்ன வேணு ஆகியிருக்கலாம். ஒரு நப்பாசைதான்.''

நம்ப முடியாதவனாய் ஜயசிலன் முகத்தை முழங்காலுக்குள் பதித்தான். ராணுவக்காரர்களிடமிருந்து சீலியா தப்பியிருக்க முடியுமா? அவளை அவர்கள் உயிரோடு விட்டிருப்பார்களா? அவளை உபயோகித்து விட்டுக் கடாசியிருப்பார்களோ? வீட்டுக்கு ஏன் திரும்பவில்லே? வீட்டுக்கு வரக் கூச்சப்பட்டோ, அச்சப்பட்டோ இந்தியாவுக்கு ஓடியிருப்பாளோ?

அவனுக்கு நெஞ்சு படபடத்து நெற்றி வியர்த்தது.

அப்படியும் இருக்குமோ? அதற்குத்தான் நான் இன்னும் ஜீவித்திருக்கிறேனோ?

யாரோ அவனைத் தொட்டார்கள். அவன் நிமிர்ந்தான். சீலியாவின் அப்பா நின்றிருந்தார். கையில் ஒரு கத்தை நோட்டுடன்.

''இந்தா, 'போட்'டுக்கான பணம் வெச்சிருக்கேன். வழுக்கிட்டு இந்தியாவுக்குப் போய்விடு. சீலியா இங்க வந்தா நாங்க இருக்கோம். இந்தியாவிலே இருந்தா நீ இருப்பே.''

உணர்ச்சிப் பெருக்கில் ஜயசிலன் நிலைகுலைந்து போனான். தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல் எழுந்து அவரைத் தழுவிக் குலுங்கக் குலுங்க அழுதான்.

''நான் ஒரு பாவி; என்னாலேதான் சீலியாவுக்கு இந்தக் கதி நேர்ந்தது! உங்களுடைய பணத்தை எப்படி ஏற்பேன்?''

''உஷ்! இப்படியெல்லாம் கதைக்க வேண்டாம். எங்களுக்கு அப்படிப்பட்ட நினைப்பு இல்லே. நீர் கிளம்பிப் போவீர். பரித்துறை வேண்டாம். காங்கேசன் துறைக்குப் போவீர் பதுங்கி. இந்த இந்தியப் பொடியன்? அவரை என்ன செய்வீர்?''

ஜயசிலன் பிரபுவைப் பார்த்தான். ஓர் அட்சரம் விடாமல் கேட்டுக் கொண்டிருந்த பிரபு, ''நானும் போயிடறேன்'' என்றான்.

''போட்'டுக்குப் பணம் ரூ. 1300 ஆகும்.''

''பணம் இருக்கு.''

காங்கேசன் துறைக்குப் போய்த் தோணி பிடிப்பது என்று தீர்மானித்த பிறகு அம்மாள் இருவருக்கும் சாப்பாடு போட்டாள். அவர்களுடைய காயங்களுக்கு மருந்து போட்டாள். அரசியல் பேச்சே பேசவில்லே யாரும். தன்னுடைய கேள்விகளுக்குச் சரியான பதில் கிடைக்காததால் பிரபுவும் வாயை மூடிக் கொண்டான்.

சாப்பிட்ட கையுடன் அவர்கள் இருட்டிலேயே கிளம்பினார்கள். ராணுவக்காரர்களின் பார்வையில் படாமல் பல சந்து பொந்துகளில் புகுந்து ஒரு வேங்கைப் புலியின் லாகவத்துடன் ஜயசிலன் விரைந்த துரிதத்துக்கு ஈடுகொடுத்துப் பிரபு தொடர்ந்தான். இரவுப் போது புதர்களில் பதுங்கி உறங்கி மறுநாள் பகல் பொழுதை அங்கேயே கழித்து, நடுச்சாம நேரத்தில் காங்கேசன் துறையை அடைந்தார்கள். தோணிக்காரனுடன் பேரம்பேசி,ஏறி அமர்ந்து கடலுக்குள் நகர்ந்ததும் யாழ்ப்பாணக் கரை மறைந்து இருளில் கலந்தது.

ஜயசிலனுக்குத் தன்னுடைய அங்கம் ஒன்று நழுவினாற்போல் நெஞ்சை அடைத்தது. ''கிளம்பிட்டம்'' என்று பிரபு சிரித்தான்.

''ராமேசுவரம் போய்ச் சேருகிற வரை நிச்சயமில்லே. சிங்களக் கடற்படை நம்மைக் குறி வைக்கக் காத்திருக்கு.''

பிரபுவின் முகம் பேயறைந்தாற்போல் ஆயிற்று.

ஜயசிலனுக்குச் சிரிப்பு வந்தது. ''இனி எண்டைச் சரித்திரத்தைப் பற்றி நான் கதைக்கலாம். உயிர் தப்பிப் போனால் நீர் எழுதுவீர்!'' என்றான்.

(தொடரும்)

அமரர் கல்கி
நினைவுச் சிறுகதைப்
போட்டி - 1987.
ரூ 750/- இரண்டாம் பரிசுக் கதை.



# மணி மணியாய் ஐம்பது இளைஞர்கள்!

தமிழினியன்




"உங்கள் அகாடமிக் ரிக்கார்டுகள் திருப்தியாய் இருக்கின்றன. ஓட்டப் பந்தயத்திலே ஸ்டேட் அவார்டுகூட வாங்கி இருக்கிறீர்களே...!"

காகிதத்தில் புரண்டு கொண்டிருந்த கண்ணைப் பெயர்த்து, வியப்புடன் அந்த இளைஞனைப் பார்த்தார், ஆதிநாராயணன்.

அவன் கூச்சத்துடன் உடம்பை நெளித்து, "ஆமாம், சார்" என்றான்.

"நியூஸ் பேப்பரிலே படிச்சிருப்பீங்க என்று நினைக்கிறேன். பப்ளிக் செக்டாரிலே இந்தத் தொழிற்சாலைதான் முன்னணியில் நிற்கிறது..."

"தெரியும், சார்."

"முதல் வருஷம் உங்களுக்குப் பயிற்சி. இந்தத் தொழிற்சாலையில் உள்ள பதினொரு இலாகாக்களிலும் ஒவ்வொரு மாதம் பயிற்சி கொடுப்பார்கள். அந்தப் பயிற்சியின் அடிப்படையில்தான் உங்களை ரெகுலர் அப்பாயிண்ட்மெண்ட் பண்ணுவோம்."

"ஆகட்டும், சார்." என்று சிக்கனமாகத் தலையசைத்தான்.

இருபத்து மூன்று வயதிருக்கும். பெயர், கோபால். மாநிறம், உருவிய வாள் போல் நீட்டுப் போக்காய் இருந்தான். விழிகள் தீர்க்கமாய், 'எதையும் சாதிக்கக் கூடியவன்' என்ற நம்பிக்கையைத் தந்தன.

அவன் மட்டுமல்ல.

அவனைப் போல் ஐம்பது இளைஞர்கள். அந்த நேர்முகப் பேட்டியில் கலந்து கொண்ட அறுநூறுக்கு மேற்பட்ட அரும்பு மீசைகளில் சலித்தெடுக்கப்பட்ட பொறுக்கு மணிகள்.

"வரும் ஆகஸ்டில் பயிற்சியை ஆரம்பிக்கலாம், சார்!" என்று பணிவுடன் பேச்சைத் துவங்கினார், ஆதிநாராயணன். பத்தாயிரம் பேர் பணிபுரியும் அத்தொழிற்சாலையின் பர்சானல் மானேஜர், அவர். "இந்தத் தடவை பாலிடெக்னிக்கில் 'ராங்க்' வந்தவர்களை மட்டுமே எடுத்திருக்கிறோம், சார். அதோடு... விளையாட்டு, பொது அறிவு, விஞ்ஞானம் என்று ரொம்பப் பேரிடம் சாமர்த்தியம் தெரிகிறது."

"இஸிட்..." மேகவர்ண டையை மெள்ளத் தளர்த்திப் புன்னகைபுரிந்தார், ஜி. எம்.

"இனி இவர்களின் திறமையை நாம் தான் சரியான முறையில் வெளிக்கொண்டு வரவேண்டும். அதற்கு நான் ஒரு புதிய திட்டம் வைத்திருக்கிறேன். அதைச் சொல்ல ஜி. எம். அவர்கள் என்னை அனுமதிக்கவேண்டும்."

"சந்தோஷமாக அனுமதிக்கிறேன், மிஸ்டர் ஆதி. சொல்லுங்கள்" — நிமிர்ந்து உட்கார்ந்து, காதைக் கூர்மையாக்கிக் கொண்டார், ஜி. எம்.

வெளித் தொழிற்சாலைகளில் இருந்து பல தரப்பட்ட அதிகாரிகளை வரவழைத்து அவர்களுக்குத் தெரிந்த சப்ஜெக்டில் லெக்சர் கொடுக்கச் செய்யலாம் என்று நினைக்கிறேன். அதனால் அவர்களின் நேரடி அனுபவம், அந்தந்த நிறுவனங்களில் கையாளப்படும் உற்பத்தி நுணுக்கம், தொழில் உறவு போன்ற விஷயங்களை நம் பையன்கள் தெரிந்து கொள்வார்கள்."

"வெரிகுட், ஐடியா" ஜி. எம். மேசையைத் தட்டி உற்சாகமாகப் பாராட்டினார்.

"இது சம்பந்தமாக நிதி எவ்வளவு

தேவைப்படும் என்பதையும் தோராய மாகப் பார்த்திருக்கிறேன்.''

''சொல்லுங்கள்.''

''லெக்சர் எடுக்கிறவர்களுக்குத் தரக் கூடிய ஃபீஸ், ஸ்பெஷல் எய்ட்ஸ், சிற்றுண்டி, டிரான்ஸ்போர்ட் போன்றவை ஐந்து லட் சம் வருகிறது.''

''பரவாயில்லே மிஸ்டர், ஆதி. மேன் பவரை டெவலப் பண்ணணும் என்கிறது தான் நம் மினிஸ்டிரியோட சமீபத்திய லட்சி யம். புரபோசல் அனுப்புங்கள். அப்ரூவல் கொடுத்திடறேன்.''

''இன்னொரு முக்கியமான விஷயம்.''

''எஸ்...''

''பெரும்பாலான பையன்கள் டவுனிலிருந்து வருகிறார்கள். பஸ் பிரச்னை. சரியான நேரத்தை அனுசரிக்க முடியாது. அதனாலே ஒரு சின்ன ஐடியா.'' ஆதிநாரா யணனைப் பொறுத்த வரையில் எல்லாமே 'சின்ன' விஷயங்கள்தாம்.

சிரித்துக் கொண்டே, ''சொல்லுங்கள்'' என்றார், ஜி. எம்.

''கம்யூனிடி சென்டருக்குப் பக்கத்திலே கொஞ்சம் ஓபன் ஏரியா இருக்கு. அதிலே 'டார்மிடரி' கட்டிப் பையன்களை அங்கேயே தங்கும்படி செய்திடலாம். சிவில் இன்ஜினி யரை கன்சல்ட் பண்ணினேன். மூன்று லட்சத் துக்கு எஸ்டிமேட் கொடுத்திருக்கிறார்...'' என்று சொல்லிக் கொண்டு வந்த ஆதி, ஜி. எம். முகவாயைத் தடவுவதைப் பார்த்த தும் பேச்சை நிறுத்தினார். ''என்ன சார், யோசனை?''

''ஒண்ணுமில்லே, மிஸ்டர் ஆதி. இந்த வருஷம் காபிட்டல் பட்ஜெட்டிலே கட்டட வேலை எதுவும் செய்யக் கூடாது என்று ஓர் உத்தரவு இருக்கிறது. அதான்...''

''அப்படின்னா அது வேண்டாம், சார். லீவிட்.''

''நோ... நோ...'' என்று அவசரமாகக் குறுக்கிட்டார், ஜி. எம். ''நம் தேவையை உத்தேசித்தால் இது அவசியமாகவே எனக் குத் தோன்றுகிறது. ஆகவே... நீங்கள் டெண்டர் விட ஏற்பாடு பண்ணுங்க.'' என்றார், தைரியமாக.

ஆதியின் புருவத்தில் கோடுகள் முளைத் தன. ''போர்டு அப்ரூவல் வேண்டுமே, சார்.''

ஜி. எம். சிரித்தார். ''நான்தான் சொன் னேனே. அப்ரூவல் கேட்டு வாங்குவது. முடி யாத காரியம். அதனால்தான் இந்தக் குறுக்கு வழி. ஆண்டிசிபேடிவ் சாங்ஷனில் வேலையை ஆரம்பிச்சுடுவோம். நாம் செய் வது கம்பெனியின் நலனுக்காக. அது மேலே உள்ளவர்களுக்குப் புரிந்தால் சரி. இல்லா விட்டால் சமாளிக்க வேண்டியதுதான்...''

''எதுக்கு சார், அனாவசிய ரிஸ்க்?'' மீண்டும் தயங்கினார், ஆதி.

''கவலையை விடுங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று ஜி. எம். தைரியம் சொல்லியும் மௌனமாகவே இருந்தார், ஆதி.

''இன்னும் என்ன யோசிக்கிறீங்க?''

''ஒண்ணுமில்லே, சார். உங்கள் கமிட் மெண்ட் என்றால் அதிகமாயிட்ட மாதிரி தோணுது. ம்...'' என்று பெருமூச்சுடன் சொன்னார்: ''அவர்களுக்கு யூனிஃபார்ம், பாதுகாப்பு ஷூ. இவைகளுக்கு எழுபதாயி ரம் தேவைப்படும்.''

''அதெல்லாம் வழக்கமான அயிட்டங்கள் தானே. லோகல் பர்சேஸ் ஏற்பாடு பண்ணி விடுங்கள்.''

''நாம் தரும் உதவித் தொகை ஐம்பது ரூபாய் போதாது. மெஸ் அலவன்சாக மாதம் நூறு ரூபாய் தரலாமென்று போன மீட்டிங்கிலே பேசினோம்.''

''அதை இப்போது கொடுத்திடுங் களேன்.''

''அவ்வளவுதான், சார். ரொம்ப நன்றி. நான் புறப்படுகிறேன்.'' — எழுந்து கொண் டார், ஆதி.

**அ**ன்று.

தமக்குரிய அலுவலகத் தனி அறையில், தேவையான கடிதங்களைச் சேகரித்துப் பிளாஸ்டிக் கோப்பில் அடுக்கிக்கொண்டிருந் தார், ஆதிநாராயணன்.

இன்னும் சில நிமிடங்களில் அவசரமான காரியம் ஒன்று அவருக்காகக் காத்திருக் கிறது. அதன் முஸ்தீபில் பரபரப்பாக இயங் கினார், அவர்.

அப்போது போன் ஒலித்தது.

'இந்த நேரத்தில் யார்...?' — முணுமுணுத் துக் கொண்டே ரிசீவரை எடுத்து, ''ஆதி நாராயணன் பேசுகிறேன்'' என்றார்.

அடுத்த முனையில், ''சாந்தி...'' — அவரது மனைவி.

''என்னம்மா?''

''காத்தாலேயே சொன்னேன். இன் னிக்கு ஆபீஸ் வேண்டாமென்று. கேட் டேளா? இப்ப விஜி, 'அப்பா... அப்பா' ன்னு புலம்பிண்டே இருக்காள்.''

''அனஸ்தீஸியா கொடுத்தார்களோ?''

''இன்னும் பத்து நிமிஷங்களில் கொடுப் பார்களாம்.''

''அது கொடுத்துட்டால் குழந்தை தூங் கிடுவாள். அது வரையில் தொந்தரவு பண் ணிட்டுத்தான் இருப்பாள்.''

''நீங்கள் பேசறதைப் பார்த்தால், வரமாட் டீங்க போலிருக்கே...'' பரிதாபக் குரலில் கிட்டத்தட்ட புலம்பினாள், அவரது மனைவி.

ஆனால், ஆதிநாராயணனுக்கு அது உரைத் ததாகத் தெரியவில்லை.

''சாந்தி... நீ கூட இப்படிப் பேசினால் எப்படிம்மா, இன்னிக்கு டெண்டர் பிரித்து நாளைக்கே வேலை ஆரம்பிக்கணும். நான் போகாவிட்டால் டெண்டர் விடுவதை ஒத்திப் போட்டு வேலையைத் தாமதப்படுத் திடுவாங்க.''

''ம்... ம்...'' பெருமூச்சு விட்டாள், சாந்தி. ''உங்கள் வேலை உங்களுக்கு முக்கியம்.''

''இல்லையா பின்னே. கடமையுணர் வோட நடந்து கொண்டால்தானே கம்பெனி

# ஜோக் எழுதுங்கள்!

## பரிசு ரூ 200/-



இந்த வாரம் யாரைக் கிண்டல் செய்வது? வேறு யாரை, அரசியல்வாதியைத் தான்!

கீழே உள்ள வெற்றிடத்தில் ஓர் அரசியல்வாதி ஜோக் எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து அனுப்புங்கள். பிரசுரமாகும் ஜோக்குகளுக்கு ரூ. 200 பரிசு பகிர்ந்து அளிக்கப் படும். உறையின் மேல் ''அரசியல்வாதி ஜோக்'' என்று மறவாமல் குறிப்பிடவும்.

முடிவு தேதி: 19.8.87.

என் பெயர்: ....................................

விலாசம்: ....................................

....................................

யின் லட்சியம் ஈடேறும். அத்துடன் உன்னிடம் சொன்னேன் இல்லையா....? புதிதாக ஐம்பது பேருக்குப் பயிற்சி கொடுக்கப் போகிறோமென்று. அவர்களைக் கொண்டு அடுத்த வருஷம் உற்பத்தித் திட்டத்தை அதிகரிக்கப் போகிறோம். அதனால் தான் இந்த மாதிரி அவசரம்...'' மனைவியை தாஜா பண்ணும் விதத்தில் சிரித்தார், அவர்.

அப்புறம்... உங்கள் இஷ்டம்...''

''டாக்டர் பார்த்தசாரதி ரொம்ப கெட்டிக் காரர். அவரிடம் சொல்லி இருக்கிறேன். அப்பண்டிக்ஸ் இப்போதெல்லாம் ரொம்பவும் மைனர் ஆபரேஷன். கவலைக்கே இடமில்லை என்று சொல்லிவிட்டார். எல்லாம் நல்லபடியாய் நடக்கும். ஓ.கே.'' ரிசீவரை வைத்தார், ஆதி.

அதே சமயம் டிரைவர் தலையை நீட்டி, ''கார் ரெடி'' என்றார்.

''இதோ.''

மூன்றும் மாதம்.

''குட்மார்னிங், சார்!''

இண்டர்காமில் யாரிடமோ பேச முயற்சி செய்து கொண்டிருந்த ஆதிநாராயணன், அந்த இளம் மரியாதையைக் கேட்டுத் திரும்பினார்.

கோபால் நின்று கொண்டிருந்தான்.

அன்றைக்குப் பார்த்ததைவிட இன்று ஒரு சுற்றுப் பருத்திருந்தான்.

''என்ன மிஸ்டர் கோபால், சௌக்கியமா? பயிற்சி எப்படி இருக்கிறது?''

''ரியலி இண்டரஸ்டிங், சார்...''

''சந்தோஷம். இந்த மாதிரி உங்கள் ஃபீட்பேக்கைத்தான் நான் நிரம்ப எதிர்பார்த்தேன். ம்... ஆஸ்டல் சாப்பாடு நன்றாக இருக்கிறதா?''

''ரொம்பப் பிரமாதம் சார்.''

''எல்லாம் உங்கள் நன்மைக்குத்தான். நீங்கள் உற்சாகத்தோடும், திடகாத்திரமாகவும் பயிற்சியை முடிக்க வேண்டும் என்றுதான் கம்பெனி இத்தனையும் செய்கிறது.''

''புரிகிறது, சார். நானே இதைப் பற்றி உங்களிடம் பேசணும் என்றிருந்தேன். அதாவது... பயிற்சி முடிந்ததும் ஒரு நல்ல டிபார்ட்மெண்டாய் எனக்கு அலாட் பண்ணணும், சார்.''

ஆதி, கலகலவென்று சிரித்தார். ''அது எனக்குத் தெரியாதா, மிஸ்டர் கோபால். உங்களை மாதிரி துடிப்புள்ள இளைஞர்களை எந்த இலாகாவில் நியமிக்க வேண்டும் என்பது எங்களுக்கு நன்றாய்த் தெரியும். கவலைப்படாதீர்கள்!''

''தாங்க்யூ, சார்,'' துள்ளும் கன்றுக்குட்டியாய் அவன் வெளியேறினான்.

ஜூன் மாதம், காவேரியில் நீர் வருமோ வராதோ அந்தக் கம்பெனியில் புரமோஷன் வந்துவிடும்.

ஆமாம். அந்நிறுவனத்தில் அதுதான் உத்தியோக உயர்வுக்கான மாதம். அடிமட்ட ஊழியர்கள் முதல் மேல்மட்ட அதிகாரிகள்

வரை, தமக்கு வரவேண்டிய 'புரமோஷன் ஆர்டர்' எப்போது... எப்போது என எதிர் பார்த்துக் கொண்டிருக்க —

''நம்ம ஜி. எம்.முக்கு இந்த ஆண்டு வர வேண்டிய புரமோஷன் வரவில்லையாமே.''

''வரவில்லையா, என்ன விஷயம்?''

''நமக்கு அதெல்லாம் எப்படியண்ணே தெரியும். மேலே உள்ளவங்க சமாசாரம் இல்லையா?''

வெளி வராந்தாவில் யாரோ இரண்டு தொழிலாளர்கள் புதிரும், குழப்பமுமாகப் பேசிக் கொண்டு போனார்கள்.

அறைக்குள் இருந்து அவற்றைக் காதில் வாங்கிக் கொண்டிருந்தார், ஆதிநாராயணன்.

''ஸ்... ஸ்...'' பெருமூச்சொன்று அவரது உடல் முழுக்க விம்மி ஓடியது.

'ஜி. எம்.முக்குப் புரமோஷன் வராததன் காரணம் அவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால், எனக்குத் தெரியும். அவரை, வேண்டுமென்றே செலக்ஷன் கமிட்டியில் காலை வாரிவிட்டார்கள். அதற்கு வில்லங்கமானவன் நான். நானேதான் அதற்குக் காரணம். என்னுடைய யோசனைக்கு ஆதரவாக, முன் அனுமதி இல்லாமல் பயிற்சியாளர்களுக்கு 'டார்மிடரி' கட்டியது சேர்மனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் போர்டு மீட்டிங்கில் புகாரைக் கிளப்பி, ஜி. எம். புரமோஷனை 'கட்' பண்ணிவிட்டார், எம். டி.

'ஆனால், ஜி. எம்? அவர் பக்கா ஜென்டில் மேன். அதற்காக அவர் துளிக்கூட வருத்தப் படவில்லையே?'

'இதெல்லாம்சகஜம்,மிஸ்டர் ஆதி. செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருந்து புரமோஷன் பெறுவதைவிட, புரமோஷனைப் பற்றிக் கவலைப்படாமல் அதைச் செய்து முடித்தோமே, அதிலேதான் நம்து சம்பிரம் இருக்கிறது. இதைத்தான் 'கர்மங்களைச் செய். பலா பலன்களைப் பற்றிக் கவலைப் படாதே' என்கிறார் கிருஷ்ண பரமாத்மா. ஒரு மனிதனின் ஆத்மசந்தோஷம் அதில்தான் இருக்கிறது. இன்றைக்கில்லாவிட்டாலும் என்றைக்காவது ஒருநாள் நம் செய்கையின் புனித நோக்கம் மற்றவர்களுக்குப் புரியாமல் போகாது. அதுவரையில் காத்திருப் போம்...''

பேச்சில் என்ன ஒரு தெளிவு... எத்தனை தீர்க்கம்... எவ்வளவு நயமாகப் பேசினார், மனிதர்...!'

''எதிர்க் கட்சியினருக்கு இந்த வேட்டியில் தான் சவால் விடுகிறேன். உங்களால் ஜெயித்து ஆட்சி அமைக்க முடியுமா? அப்படியே ஜெயித்து ஆட்சி அமைத்தாலும் எனக்கு ஒரு அமைச்சர் பதவி கொடுக்கும் துணிவு உங்களுக்கு உண்டா?''

— [illegible] கோபால்சாமி



**சா**ர்... புரடக்ஷன் மானேஜர் உங்களுடன் பேச வேண்டுமாம். கனெக்ஷன் கொடுக்கட்டுமா?'' என்றார் அந்தரங்கக் காரியதரிசி இணை தொலைபேசியில்.

அனுமதி வாங்கிக் கொடுத்ததும், ''மிஸ்டர் ஆதி நாராயணன். இந்த வருஷம் உற்பத்தி உங்களை நம்பித்தான் சார், இருக்கிறது. உங்கள் பயிற்சியாளர்களை எதிர்பார்த்து டார்கெட்டை அதிகப்படுத்தி இருக்கிறோம். அவர்கள் பயிற்சி எப்போது பூர்த்தியாகிறது?'' என்றார் அவர். இயல்பான தோரணையில்.

''ஜூலையில் முடிகிறது, சார். ஆகஸ்டு முதல் வாரத்திலேயே ரெகுலர் பண்ணிடுவோம். இந்தப் பாட்சில் அத்தனை பேரும் நல்ல புத்திசாலிகள். சிரமமில்லாமல் டார்கெட்டைச் சரிபண்ணிடலாம், சார்...''

''வெரிகுட்... வெரிகுட்... தாங்க்யூ வெரி மச்....''

புரடக்ஷன் மானேஜர் போனை வைத்ததும், ஸ்டோர்ஸ் மானேஜருடன் தொடர்பு கொண்டார், ஆதிநாராயணன்.

புதிய பயிற்சியாளர்களில் அவரது இலாகாவுக்கு எத்தனை பேர் தேவைப்படுவார்கள் என்று விசாரித்தபோது —

''யாருமே தேவை இல்லை, மிஸ்டர் ஆதி'' என்று சிரித்தார் அவர். ''சொல்லப் போனால் தற்சமயம் இருக்கிற ஸ்டாஃப்புக்கே போதுமான வேலை கிடையாது. வேறு இலாகாவுக்கு மாற்றலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

அவரைப் போலவே, ஷிப்பிங், பராமரிப்புத்துறையிலும் 'வேலை இல்லை. புதியவர்கள் வேண்டாம்' என்று சொல்லி விட்டார்கள்.

ஆகவே, பயிற்சிக்காலம் முடிந்ததும் அத்தனைபேரையும்புரடக்ஷன்ஷாப்பிலேயே நிர்ணயம் பண்ணிவிடலாம் என்று நினைத்தார், ஆதிநாராயணன்.

ஆனால்...

சுலபமாய் அவர் எடுத்த இந்த முடிவு மிகப் பெரிய சுமையாகவும், சிக்கலாகவும் இருக்கும் என்று அவர் கொஞ்சமும்,எதிர் பார்க்கவில்லை.

**இ**ரண்டு பயிற்சி முடிந்து. அன்று இறுதிக்கட்டம்.

பயிற்சியாளர்களை நிரந்தர வேலையில் அமர்த்தும் முன் ஒரு நேர்முகப் பரிசீலனை.

இலாகாவாரியாக மாதா மாதம் வந்த அறிக்கையைப் புரட்டிக் கொண்டே கேட்டார், ஆதிநாராயணன்.

''மிஸ்டர் கோபால், பாலிடெக்னிக் போலவே உங்கள் டிரெயினிங் ரிக்கார்டும் அருமையாக இருக்கிறது. புரடக்ஷன், பிளானிங், அசெம்பிளி, மெஷின் ஷாப் எல்லாப் பிரிவிலும் உங்கள் செயல் திறமையைப் பற்றிப் பிரமாதமாகப் பாராட்டி இருக்கிறார்கள். ஸீ... நீங்கள் அநேகமாக எல்லா இலாகாக்களிலும் பயிற்சி பெற்றிருக்கிறீர்கள். எது நல்ல இலாகா என்பது என்னைவிட உங்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே உங்கள் திறமைக்கு ஏற்ற இலாகா எது என்று சொல்லுங்கள். உங்கள் விருப்பத்துக்கே உங்களை அப்பாயிண்ட்மெண்ட் பண்ணிவிடுகிறேன். ம்... சொல்லுங்கள்.'' சகஜமாய், சின்னதாய்ச் சிரித்துக் கொண்டே கோபாலைப் பார்த்தார், ஆதி.

''சொல்லுங்கள், மிஸ்டர் கோபால். உங்களுக்கு எந்த டிபார்ட்மெண்ட் வேண்டும்?''

அவன் அலட்டிக் கொள்ளாமல், மிக அமைதியாக அழுத்தமாகச் சொன்னான்:




இங்கிலாந்திலுள்ள பல்வேறு ஹோட்டல்களில் சாப்பாட்டு மேஜைகளும், அறைகளும் 1999—ஆம் ஆண்டு டிசம்பர் 31—ஆம் தேதி இரவுக்கு இப்போது முதற்கொண்டு ரிசர்வேஷன்களைத் துவக்கிவிட்டன. நான் முந்தி, நீ முந்தி என்று பலர் ரிசர்வ் செய்கிறார்கள்! 20—ஆம் நூற்றாண்டு முடிந்து 21—ஆம் நூற்றாண்டு துவங்கும் பொழுதைக் கொண்டாடத்தான் இந்தப் போட்டா போட்டி!

ஆதாரம்: சொசைட்டி
தகவல்: சேரா பங்க

''எனக்கு ஸ்டோர்ஸ் டிபார்ட்மெண்ட் வேண்டும், சார்.''

பிடித்திருந்த பென்சில் 'லொடக்' கென்று நழுவி விழ, ''ஸ்டோர்ஸ் டிபார்ட்மெண்டா?'' என்று திகைத்தார் ஆதி.

ஸ்டோர்ஸ், ஷிப்பிங், பராமரிப்புத் துறை இவற்றில் ஏற்கெனவே உள்ளவர்களுக்கே போதுமான வேலையில்லை. தண்டப்பொழுது போக்குவதாக அந்தந்த இலாகா மானேஜர்களே புலம்பி இருக்கிறார்கள். நிலைமை அவ்வாறிருக்க இவர்கள் அங்கே போய் என்ன சாதிக்க முடியும்? எந்த நோக்கத்தில் அந்த இலாகா வேண்டும் என்கிறான், இந்த இளைஞன்.

ஆதியின் திகைப்பு அடங்கவில்லை.

கோபால் தொடர்ந்தான்:

''உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா, சார். ஆரம்பத்திலேயே நான் உங்களிடம் கேட்டிருக்கிறேன். 'நல்ல டிபார்ட்மெண்ட் வேண்டும்' என்று. நீங்களும் தருவதாக வாக்களித்திருக்கிறீர்கள். ஸ்டோர்ஸ்தான் நல்ல டிபார்ட்மெண்ட். எனக்கு அங்கேயே கொடுத்திடுங்கள், சார்.''

ஆதிநாராயணன், மேலும் அதிர்ந்தார். குண்டு மேல் குண்டு பாயும் ஜாப்னா தீவு போல், பீதியால் புழுங்கினார், அவர். டையைத் தளர்த்திவிட்டுக் கொண்டார்.

''மிஸ்டர் கோபால், எந்தவிதத்தில் ஸ்டோர்ஸை நல்ல டிபார்ட்மெண்ட் என்கிறீர்கள்?''

''அங்கேதான் சார், வேலை அவ்வளவாக இல்லை.''

கடந்த ஓராண்டுப் பயிற்சியில் தெரிந்து கொண்ட மிகப் பெரிய உண்மையை வெளியிட்டவன்போல் பெருமையுடன் புன்னகை புரிந்தான் கோபால்.

''மை காட்.'' வாய்க்குள் முணுமுணுத்தவராய் நாற்காலியில் சரிந்தார், ஆதிநாராயணன்.

கோபாலிடம் மேற்கொண்டு என்ன கேட்பது என்றே அவருக்குப் புரியவில்லை. ஆத்திரம், ஏமாற்றம் இரண்டும் மாறி மாறி அவரைத் திணற அடித்தன. எதுவுமே பேசப் புரியாத குழப்பத்துடன், ''தட்ஸ் ஆல் ரைட் மிஸ்டர் கோபால். நீங்கள் போகலாம்'' என்று அவனை அனுப்பி வைத்தார்.

அடுத்து ஒரு 'டி' ஷர்ட் வந்தான். கச்சிதமாக 'இன்' பண்ணிக்கம்பீரமாகச் சிரித்தான்.

''உங்களுக்கு:''

''ஸ்டோர்ஸ் டிபார்ட்மெண்ட், சார்.''

தொடர்ந்து வந்த அத்தனை பேரும் ஸ்டோர்ஸ், இல்லாவிட்டால் ஷிப்பிங், அல்லது பராமரிப்புத்துறை. இப்படி உற்பத்திக்குக் கொஞ்சமும் சம்பந்தம் இல்லாத — வேலை இல்லாத உதிரி இலாகாக்களே வேண்டும் என்றார்கள்.

அவர்களின் படிப்பு என்ன, பன்னிரண்டு மாதமாக அவர்களுக்குத் தந்த பயிற்சியின் தீவிரம் என்ன, அத்தனை சிரத்தைக்குப் பிறகும் இப்போது அவர்கள் இலாகா கேட்கும் மெத்தனம்.

மேஜை மீதிருந்த கம்ப்யூட்டர் அறிக்கையை எடுத்துப் பார்த்தார், ஆதி.

உதவித் தொகையாக இதுவரை அவர்களுக்குப் பட்டுவாடா ஆன தொகை ஆறு லட்சம். பயிற்சிக்கான சிறப்புரை நிகழ்த்தியவர்களுக்குத் தரப்பட்ட சன்மானம், நாலு லட்சம். சிற்றுண்டி, போக்குவரத்து முதலான இதர செலவினங்கள் இருபத்தெட்டு லட்சம்....

லட்சங்கள் இருக்கட்டும்.

அப்பயிற்சியின் பொருட்டுதானே, ஜி. எம்முக்கு வரவேண்டிய புரமோஷன் தடைப்பட்டது. அப்பயிற்சியாளர்களுக்கு நன்மை சேர்க்கும் நோக்கத்தினால்தானே, அருமைப் புதல்வியின் ஆபரேஷனுக்குக் கூட அருகில் இருக்க மாட்டாமல் ஓடோடிச் செயல்பட்டார், ஆதிநாராயணன்.

இப்படி எத்தனை சொந்த இழப்புகள்... இடைஞ்சல்கள்.

எத்தனை பிரயாசை... எத்தனை சமாளிப்புகள்...

அத்தனைக்குப் பிறகும் —

'வேலை இல்லாத இலாகா வேண்டும்' என்கிறார்களே, இந்த இளைஞர்கள்.

அப்படி வேலை இல்லாத இலாகாதான், நல்ல இலாகா என்கிறார்களே, இந்த எதிர்காலச் சிற்பிகள்.

வேலை இல்லாத பிரிவு, நல்ல பிரிவாம்!

அந்தோ... இப்படி ஒரு முரண்பாடான அகராதி இந்த இளைஞர்களுக்கு எங்கிருந்து கிடைத்தது? யார் கொடுத்தார்கள்?

இதற்காகவா இம்மாணிக்க மணிகளை இந்தப் பாரத நிறுவனம் பட்டை தீட்டிப் பிரகாசிக்க வைத்தது?

ஆதிநாராயணனுக்கு அந்த ஏ. சி. அறை கட்டெரிக்கும் பாலையாய்ப் பொசுக்க ஆரம்பித்தது!

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 6

## மறைந்த மண்டபம்

மறுநாள் காலையில் உதய சூரியனுடைய செங்கிரணங்கள் வந்தியத்தேவனைத் தட்டி எழுப்பின. உறக்கம் நீங்கிய பிறகும் சுய உணர்வு வருவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. அவன் மேல் விழுந்தது சூரியனுடைய வெளிச்சமா அல்லது கலங்கரை விளக்கின் ஒளியா என்று தெளிவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. முதல் நாள் இரவு அனுபவங்களில் எது உண்மை, எது கனவு என்று எண்ணிப் பார்த்த போது அவனுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. வீட்டிலே பெரியவரின் மனைவியும் அவருடைய மருமகனும் மட்டுமே இருந்தார்கள். பெரியவர் குழகர் கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்வதற்காகப் போயிருப்பதாக அவர்கள் சொன்னார்கள். பூங்குழலியைப் பற்றி அவர்களிடம் விசாரிக்க அவனுக்குத் தைரியம் வரவில்லை. அவர்கள் அளித்த காலை உணவை அருந்திவிட்டுச் சுற்றுமுற்றும் கண்களைச் செலுத்தித் தேடிப் பார்த்தான். பூங்குழலி எங்கும் அகப்படவில்லை. ஆலயத்துக்குப் போய்ப் பார்க்கலாம் என்று போனான். அங்கே அவள் தந்தை இருந்தார். கோயிலைச் சுற்றியிருந்த மரங்களிலிருந்து பூஜைக்குரிய புஷ்பங்களைக் கொய்து கொண்டிருந்தார். மலர்களைத் தொடுத்து மாலையாக்குவதற்குச் சில நாள் பூங்குழலி வருவதுண்டு என்றும், ஆனால் இன்றைக்கு வரவில்லையென்றும் கூறினார். "எங்கேயாவது காட்டில் மான்களைத் துரத்திக் கொண்டிருப்பாள். அல்லது கடற்கரையோடு திரிந்துகொண்டிருப்பாள். அவளைத் தேடிப் பிடித்துக் கேட்டுப் பார்!" என்றார். "தம்பி! ஒரு விஷயத்தில் ஜாக்கிரதையாக இரு. அவள் பொல்லாதவள். தப்பர்த்தம் செய்து கொள்ளும்படியாக அவளிடம் ஏதாவது சொல்லிவிடாதே. காவியங்களில் படித்திருப்பதை நினைத்துக் கொண்டு சிருங்கார ரஸத்தில் இறங்கி விடாதே! உடனே பத்திரகாளியாக மாறி விடுவாள். அப்புறம் உன் உயிர் உன்னுடையது அல்ல!" என்று எச்சரிக்கை செய்தார் பெரியவர். முதல் நாள் கனவை நினைத்துக் கொண்டு வந்தியத்தேவன் உடல் சிலிர்த்தான். பிறகு காட்டிற்குள் பூங்குழலியைத் தேடிக் கொண்டு போனான். காட்டிலே எங்கே என்று தேடுவது? சிறிது நேரத்துக்கெல்லாம் அவனுக்கு

அலுத்துப் போய்விட்டது. காட்டிலிருந்து வெளியேறினால் போதும் என்று ஆகிவிட்டது. வெளியேறிய பின்னர் கடற்கரையை நோக்கிச் சென்றான். கடற்கரையோடு நீண்ட தூரம் அலைந்தும் பலன் ஒன்றும் இல்லை. பூங்குழலியைக்காணவில்லை. "எப்படியும் மத்தியானச் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வருவாள் அல்லவா? அங்கு பார்த்துக் கொள்ளலாம்!" என்று திரும்பினான். திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. அலையும் ஆட்டமும் அதிகமில்லாமல் அமைதியாக இருந்த அந்தக் கடலில் இறங்கிக் குளிக்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. இந்தப் பக்கத்தில் கடலில் ஆழம் அதிகம் இல்லையென்று முன்னமே கேள்விப்பட்டதுண்டு. முதல் நாள் மாலையில் பூங்குழலியும் சொல்லியிருக்கிறாள். பின்னே, இறங்கிக் குளிப்பதற்கு என்ன தடை? கடல் விஷயத்தில் அவனுக்கிருந்த பயத்தைப் போக்கிக் கொள்வதும் அவசியம். படகிலும் கப்பலிலும் ஏறிப் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. கடலைக் கண்டு பயப்பட்டால் முடியுமா? அந்தப் பயத்தைப் போக்கிக் கொண்டே ஆகவேண்டும்.



இடுப்பைச் சுற்றிக் கட்டியிருந்த சுருள் துணியையும் கத்தியையும் எடுத்துக் கடற்கரையில் வைத்து விட்டுக் கடலில் இறங்கினான். மெள்ள மெள்ள ஜாக்கிரதையாகக் காலை எடுத்து வைத்து நடந்தான். போகப் போக முழங்கால் அளவு ஜலத்துக்கு மேல் இல்லை. சிறிய அலைகள் வந்து மோதிய போது ஜலம் இடுப்பளவுக்கு வந்தது. அதற்கு மேலே இல்லை. "அழகான சமுத்திரம் இது! அமிழ்ந்து குளிப்பதற்குக் கூடத் தண்ணீர் இல்லையே?" என்று சொல்லிக் கொண்டே இன்னும் மேலே சென்றான்.

அடேடே! ஆழம் இல்லை என்று எண்ணிக் கொண்டே கரையிலிருந்து வெகு தூரம் வந்துவிட்டோமே? திடீரென்று கடல் பொங்கினால்? அலைகள் பெரிதாகி மோதினால்? இந்த எண்ணம் தோன்றிக் கரைப் பக்கம் திரும்பிப் பார்த்தான். அதிக தூரம் கரையிலிருந்து வந்துவிட்டது என்னமோ உண்மைதான்! ஆனால் அப்படியொன்றும் கடல் திடீரென்று பொங்கிவிடாது!... ஓகோ! அதோ பூங்குழலி வருகிறாளே! கரையேறி அவளைப் பிடித்துக் கொள்ள வேண்டும். பிடித்துக் கொண்டு நயமான வார்த்தைகளினால் மறுபடி கேட்க வேண்டும். அவளும் நம்மைப் பார்த்து விட்டுத்தான் வருகிறாள் போலிருக்கிறது! நாம் இருக்கும் திசையை நோக்கியே வருகிறாள்! ஏதோ நம்மைப் பார்த்துச் சமிக்ஞை கூடச் செய்கிறாளே!......

ஓ! ஓ! இது என்ன? கரையில் குனிந்து அவள் என்ன பார்க்கிறாள்? என்னத்தை எடுக்கிறாள்? நம்முடைய இடுப்பில் சுற்றும் சுருள் துணியையல்லவா எடுக்கிறாள்? பெண்ணே! அதை எடுக்காதே! அது என்னுடையது!...... நாம் சொல்வது அவள் காதில் விழவேயில்லை! இந்தக் கடல் அலைகளின் இரைச்சல்!

இதோ நம் குரல் அவளுக்குக் கேட்டு விட்டது! நம்மைப் பார்த்து அவளும் ஏதோ சொல்கிறாள்! பூங்குழலி! அது என்னுடையது! எடுக்காதே......

இந்தா! சொன்னால் கேட்க மாட்டாயா? உன் உடைமை போல் கையில் எடுத்துக் கொண்டு நீ பாட்டுக்குப் போகிறாயே! நில்! நில்!......

வந்தியத்தேவன் கரையை நோக்கி ஓட ஆரம்பித்தான். ஒரு தடவை பூங்குழலி அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு அவளும் ஓடத் தொடங்கினாள். வீடும் கலங்கரை விளக்கமும் இருந்த





பக்கத்துக்கு எதிர்ப்பக்கமாகக் காட்டை நோக்கி ஓடினாள்!

ஆகா! இவள் துஷ்டப் பெண்! துஷ்டப் பெண்ணா? அல்லது வெறும் பைத்தியமா? இந்தப் பைத்தியத்தினிடமிருந்து நமது அரைச் சுருளை எப்படியும்வாங்கியாகவேண்டுமே?...



ரண்டு தடவை கடலில் இடறி விழுந்து ஒரு வாய் உப்புத் தண்ணீரும் குடித்துவிட்டு வந்தியத்தேவன் மெதுவாகக் கரையேறினான். பிறகு அந்தப் பெண்ணைத் தொடர்ந்து ஓடினான். ஓட ஓட, அவளுடைய ஓட்டத்தின் வேகம் அதிகமாயிற்று. சற்றுத் தூரத்தில் ஐம்பது அறுபது மான்களின் கூட்டம் ஒன்று ஓடியது. மான்கள் மிரண்டு பாய்ந்து ஓடுவது, — தாவித் தாவிக் குதித்து ஓடுவது, — என்ன அழகான காட்சி! ஏன்? இதோ இந்தப் பெண் குதித்துக் குதித்து ஓடுகிறாளே? இதுவும் அந்த மான்களின் ஓட்டத்தை விட அழகில் குறைவாயில்லை! இம்மாதிரி இயற்கையாகவும் யதேச்சையாகவும் வாழும் பெண்களின் அழகே அழகுதான்!... ஆனால் இதையெல்லாம் அவளிடம் சொல்லக் கூடாது. சொன்னால் காரியம்கெட்டுப்போய்விடும்! பெரியவர்தான் எச்சரித்திருக்கிறாரே?... இருந்தாலும், இவள் எதற்காக இப்படி வீம்பு பிடித்துக் கொண்டு ஓடுகிறாள்! காட்டில் புகுந்து விட்டால் அப்புறம் அவளைக் கண்டுபிடிப்பது எப்படி?... இதோ காட்டிற்குள் புகுந்தே விட்டாள்! காரியம் கெட்டுக் குட்டிச் சுவராகிவிட்டது. நம்மைப் போன்ற மௌடீகன் உலகிலேயே வேறு யாரும் இருக்க முடியாது!... குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலை திரும்பி வருமா?

வந்தியத்தேவனும் சிறிது நேரத்தில் காட்டிற்குள் புகுந்தான். அங்குமிங்கும் அலைந்தான். அவசரத்தினாலும் பரபரப்பினாலும் செடிகளைச் சரியாக விலக்கி விட்டுக் கொண்டு நடக்காமல் உடம்பெல்லாம் முட்களால் கீறிக் கொண்டான். ''பூங்குழலி! பூங்குழலி!'' என்று கூச்சலிட்டான். பிறகு, ''மரமே! பூங்குழலியைக் கண்டாயோ?'' ''காக்காய்! பூங்குழலியைக் கண்டாயோ?' என்றெல்லாம் கேட்க ஆரம்பித்தான். இது ஏது? நமக்கே பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதே! — என்று அவன் நினைக்கத் தொடங்கிய சமயத்தில், திடீரென்று மரத்தின் மேலிருந்து ஏதோ விழுந்தது! ஆ! அவனுடைய அரைத் துணிச் சுருள்தான்! மிக்க ஆவலுடன் அதை எடுத்துச் சுருளைப் பிரித்துப் பார்த்தான். ஓலை, பொற்காசுகள் எல்லாம் பத்திரமாயிருந்தன!

''பணம் பத்திரமாயிருக்கிறதா?'' என்று ஒரு குரல் மேலேயிருந்து வந்தது. வந்தியத்தேவன் அண்ணாந்து பார்த்தான். பூங்குழலி மரக்கிளையில் உட்கார்ந்திருந்தாள்.

வியர்த்து விறுவிறுத்துப் போயிருந்த வந்தியத்தேவன் தன்னை மீறிய கோபத்தினால், ''உன்னைப் போன்ற மந்தியை நான் பார்த்ததேயில்லை!'' என்றான்.

''உன்னைப் போன்ற ஆந்தையை நான் பார்த்ததில்லை. அம்மம்மா! என்ன முழி முழித்தாய்?'' என்றாள் பூங்குழலி.

''எதற்காக இப்படி என்னை அலைக்கழித்தாய்? உனக்குப் பணம் வேண்டுமென்றால்...''

''சீச்சீ! உன் பணம் இங்கே யாருக்கு வேண்டும்?''

''அப்படியானால் எதற்காக இதைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாய்?''



''அவ்விதம் நான் செய்திராவிட்டால் நீ காட்டுக்குள் வந்திருக்க மாட்டாய். எங்கள் வீட்டுக்குத் திரும்பிப் போயிருப்பாய்......''

''போயிருந்தால் என்ன?''

''இந்த மரத்தின் மேல் ஏறிப் பார், தெரியும்!''

''என்ன தெரியும்?''

''பத்துப் பதினைந்து குதிரைகள் தெரியும்! வாள்களும் வேல்களும் மின்னுவது தெரியும்!''

அவளுடைய முகத் தோற்றத்திலிருந்து அவள் கூறுவது உண்மையாயிருக்கலாம் என்று தோன்றியது. ஆயினும் நிச்சயமாகத் தெரிந்து கொள்ள விரும்பி வந்தியத்தேவன் மரத்தின் மேல் ஏறினான். ஏறுவதற்கு முன் அரைச் சுற்றுச் சுருளைக் கெட்டியாகக் கட்டிக் கொண்டான். ஒரு வேளை இவள் மரத்தின் மேலிருந்து

அதைத் தவறிப் போட்டிருக்கலாம். இப்போது மறுபடியும் அதை அபகரிப்பதற்குச் சூழ்ச்சி செய்கிறளோ, என்னமோ, யார் கண்டது?

மரத்தின் மேலேறிக் கலங்கரை விளக்கின் பக்கம் நோக்கினன். ஆம்; பூங்குழலி கூறியது உண்மைதான். அங்கே பத்துப் பதினைந்து குதிரைகள் நின்றன. குதிரைகளின் மீது வாள்களும் வேல்களும் பிடித்த வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் யாராக இருக்கும்?...... நம்மைப் பிடிப்பதற்கு வந்த பழுவேட்டரையரின் ஆட்கள் தான்! வேறு யாராயிருக்க முடியும்?

பூங்குழலிதன்னைப்பெரும்அபாயத்திலிருந்து காப்பாற்றினள். எதற்காக? என்ன நோக்கம் பற்றி? — இன்னும் சில விஷயங்களும் தெளிவாகவில்லை!

இருவரும் மரத்திலிருந்து கீழே இறங்கினர்கள். "பூங்குழலி! என்னைப் பேரபாயத்திலிருந்து காப்பாற்றினய். உனக்கு மிக மிக நன்றி!" என்றன் வந்தியத்தேவன்.

"வெறும் பொய்! ஆண் பிள்ளைகளுக்கு நன்றிகூட உண்டா?" என்றள் பூங்குழலி.

"எல்லா ஆண் பிள்ளைகளையும் போல் என்னையும் எண்ணி விடாதே!"

"நீ எல்லாரையும் போல் இல்லை; ஒரு தனி மாதிரிதான்."

"பெண்ணே! உன்னை ஒரு கேள்வி கேட்கலாமா?"

"தாராளமாகக் கேட்கலாம்; மறுமொழி கூறுவதூ என் இஷ்டம்."

"என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று ஏன் எண்ணினய்? என் பேரில் திடீரென்று தயவு பிறக்கக் காரணம் என்ன?"

பூங்குழலிசும்மா இருந்தாள். அவள் சிறிது திகைத்துப் போனள் என்பது முகத்திலிருந்து தெரிந்தது.

அப்புறம் யோசித்துப் பார்த்து, "அசடுகளைக் கண்டால் எனக்கு எப்போதும் கொஞ்சம் பரிதாபம் உண்டு" என்றள்.

"சந்தோஷம்; இந்த வீரர்கள் என்



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி -1987

பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ள கதைகள்:—

1. வேப்பமரத்து வெள்ளைப் பூக்கள். — பூதலூர் முத்து
2. ஒரு பேனுவின் மரணம் — மானு பாஸ்கரன்
3. அமிலச் சோதனை — பராசரம் நீலகண்டன்
4. திருச்செந்தூர் இன்று: பாப நாசம் நாளை — உமா கல்யாணி
5. தேர்க்கால் — எஸ். குமார்
6. பிரிவு நெருஞ்சி — லதா ராமகிருஷ்ணன்
7. உப்பு பிஸ்கோத்து — கிருஷ்நா
8. பொய் விலங்குகள் — விஜேனுலியா
9. போர்க்கால குருவிகள் — குடந்தை சண்முகம் (அறிமுக எழுத்தாளர்)
10. சண்டைக் கோழிகள் — பாமா பார்த்தசாரதி (அறிமுக எழுத்தாளர்)
11. அந்த முதல் துளி — ந. வாசுகி (அறிமுக எழுத்தாளர்)
12. மானசிக பீடம் — திருத் துறைப்பூண்டி மோனுலிசா
13. ஏழைகள் — ராஜ் கோகுல்
14. குண்டு வீச வந்தவன் — பொன்வண்ணன்

லைத் தேடி வந்திருக்கிறார்கள் என் பதை எப்படி அறிந்தாய்?''

''உன்னைப் பார்த்தால் தெரிய வில்லையா? — நீ தப்பி ஓடி ஒளிந்து கொள்ள வந்திருக்கிறவன் என்று. நேற்றைக்கே ஊகித்தேன். இன் றைக்குக் காலையில் உன் சிநேகிதன் — வைத்தியர் மகன் — மூலமாக அது ஊர்ஜிதமாயிற்று.''

''அவன் என்ன உளறினான்?''

''காலையில் எழுந்ததும் காட்டிலே மூலிகை தேட வேண்டும் என்றான். நான் அழைத்துப் போவதாகச் சொல்லி இங்கே அழைத்துக்கொண்டு வந்தேன். என்னிடத்தில் காதல் புரிய ஆரம்பித்தான். 'உன்னுடைய சிநேகிதன் உன்னை முந்திக் கொண்டு விட்டானே?' என்று சொன் னேன்....''

''என்ன சொன்னாய்?''

''கொஞ்சம் பொறு; கேட்டுக் கொண்டு வா! நீ என்னிடம் காதல் புரியத் தொடங்கி விட்டதாகச் சொன் னேன். அப்போதுதான் உன் பேரில் அவனுடைய சந்தேகத்தை வெளியிட் டான். ஏதோ இராஜ தண்டனைக்குப் பயந்து நீ ஓடித் தப்பி வந்திருக்கிறாய் என்று அவனுக்கு வழியில் பல கார ணங்களால் சந்தேகம் தோன்றிய தாம்! 'அப்படிப்பட்டவனை நம்பி அநியாயமாகக் கெட்டுப் போகாதே! என்னைக் கலியாணம் செய்துகொள்!' என்றான். 'ரொம்ப அவசரப்படு கிறாயே? பெரியவர்களைக் கேட்க வேண்டாமா?' என்றேன். 'பழந் தமிழ் மரபையொட்டிக் களவு மணம் புரிந்து கொள்வோம்!' என்று உன் அழகான சிநேகிதன் சொன்னான். எப்படியிருக்கிறது கதை?''

''அட சண்டாளப் பாவி!'' என்று கத்தினான் வந்தியத்தேவன்.

''இதற்குள்ளே குதிரைகள் வரும் சத்தம் கேட்டது. நான் மரத்தின் மேல் ஏறிப் பார்த்து விட்டு இறங்கி வந்து அவனை ஏறிப் பார்க்கச் சொன்னேன். மரத்தின் மேலே நின்று பார்த்த போது அவனுடைய கால்கள் வெடவெடவென்று நடுங்கியதை நினைத்தால் இப்போதும் எனக்குச் சிரிப்பு வருகிறது...'' என்று சொல்லி விட்டுப் பூங்குழலி சிரித்தாள்.

"விளையாட்டு இருக்கட்டும், அப்புறம் என்ன நடந்தது?"

"அவன் மரத்தின் மேலேயிருந்து இறங்கி வந்தான். 'பார்த்தாயா? நான் சொன்னது சரியாகப் போயிற்று! அவனைப் பிடிப்பதற்குத்தான் இராஜசேவகர்கள் வந்திருக்கிறார்கள்!' என்றான். 'அப்படியானால் அவனுடன் வந்த உன்னையும் பிடிப்பார்கள் அல்லவா? நீ ஓடி எங்கேயாவது ஒளிந்து கொள்!' என்றேன். 'அப்படித்தான் செய்ய வேண்டும்' என்றான். என்னை விட்டுப் பிரிந்து சென்றான். நான் எதிர்பார்த்தபடியே நடந்தது......"

"என்ன? என்ன நடந்தது?"

"ஓடி ஒளிந்து கொள்வதாக என்னிடம் சொல்லிவிட்டு நேரே அந்தக் குதிரைக்காரர்கள் இருந்த திசையை நோக்கிப் போய் அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டான்......"

"ஐயோ! பாவம்!"

"அதிகமாகப் பரிதாபப்பட்டு விடாதே! கொஞ்சம் மிச்சம் வைத்துக் கொள்!"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"குறையும் கேள்! நீயே தெரிந்து கொள்வாய்! அவர்களிடம் நேரே போனான். அவர்கள் இவனை அதிசயத்துடன் பார்த்தார்கள். உற்று உற்றுப் பார்த்து ஒருவரோடொருவர் இரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். 'நீங்கள் யார்?' என்று இவன் கேட்டான். 'நாங்கள் வேட்டைக்காரர்கள்; மான் வேட்டையாட வந்திருக்கிறோம்' என்று அவர்களில் ஒருவன் சொன்னான். 'இல்லை; நீங்கள் என்ன வேட்டையாட வந்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும்' என்றான் இவன். அவர்கள் இன்னும் வியப்படைந்து இவனைத் தூண்டி விட்டார்கள். 'வந்தியத்தேவனைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறீர்கள். அவன் இருக்குமிடத்தைக் காட்டுகிறேன். என்னைச் சும்மா விட்டு விடுவீர்களா?' என்று கேட்டான். அவர்களும் அதற்குச் சம்மதித்தார்கள். இவன் அவர்களை அழைத்துக் கொண்டு எங்கள் வீட்டுப் பக்கம் போனான்......"

"துரோகி! சண்டாளன்!......"

"அவர்கள் போன பிறகு நான் உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன். நீ கடலில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தாய்......"

"என்னிடம் அங்கேயே இதையெல்லாம் ஏன் சொல்லவில்லை? இந்தத் துணிச் சுருளை எடுத்துக் கொண்டு ஏன் ஓடி வந்தாய்?"

"இல்லாவிட்டால், நீ அவ்வளவு வேகமாக ஓடி வந்திருப்பாயா? அந்த வேட்டைக்காரர்களை ஒரு கை பார்க்கிறேன் என்று அவர்களைத் தேடிப் போயிருந்தாலும் போயிருப்பாய்! என் பேச்சையே ஒரு வேளை நம்பியிருக்க மாட்டாய். இவ்வளவையும் சொல்லி உன்னை என்னுடன் வரும்படி சொல்வதற்குள் அவர்கள் உன்னை ஒருவேளை பார்த்திருப்பார்கள்......"

ஆகா! இந்தப் பெண்ணையா நாம் பைத்தியக்காரி என்று எண்ணினோம் என்று வந்தியத்தேவன் நினைத்து வெட்கம் அடைந்தான். இவளிடம் பூரண நம்பிக்கை வைத்தேயாக வேண்டும். இவளுடைய உதவியில்லாவிட்டால் நாம் கடலைக் கடந்து இலங்கைசெல்லமுடியாது. இவ்வளவு தூரம் வந்ததும் வீணாகும். பழுவேட்டரையர்களிடம் திரும்ப அகப்பட்டுக் கொள்ளவும் நேரலாம்.

"பெண்ணே! நீ எனக்கு எவ்வளவு பெரிய உதவி செய்திருக்கிறாய் என்பதைச் சொல்லி முடியாது. மிச்ச உதவியையும் நீதான் செய்ய வேண்டும்......"

"என்ன உதவி வேண்டும் என்கிறாய்?" என்று கேட்டாள்.

"என் சிநேகிதனுடைய இலட்சணத்தைப் பார்த்து விட்டாய் அல்லவா? அவனை நம்பிப் பயன் இல்லையென்று தெரிந்து கொண்டாய் அல்லவா? நீதான் படகு வலித்து வந்து என்னை இலங்கையில் சேர்ப்பிக்க வேண்டும்!"

பூங்குழலி மௌனமாயிருந்தாள்.

"நான் தப்புக் காரியம் எதுவும் செய்யக் கூடியவன் அல்ல என்று உனக்கு நம்பிக்கை ஏற்படுகிறதா? பெண்ணே! இலங்கைக்கு மிக முக்கியமான காரியமாக நான் உடனே

போய்த் தீர வேண்டும். இந்த உதவி எனக்கு நீ அவசியம் செய்தேயாக வேண்டும்....''

''செய்தால் எனக்கு என்ன தருவாய்?'' என்று பூங்குழலி கேட்டாள்.

அவளுடைய முகத்தில் முதன் முதலாக நாணத்தின் அறிகுறி தென்பட்டது. கன்னங்கள் குழிந்தன. அவளுடைய முகத்தின் அழகு பன்மடங்கு அதிகமாகிச் சுடர்விட்டு ஒளிர்ந்தது.

முதல் நாள் இரவு கண்ட கனவில் இதே மாதிரி அவள் கேட்டது வந்தியத் தேவனுக்கு நினைவு வந்தது. தான் அதற்குக் கூறத் தொடங்கிய மறுமொழியும் நினைவு வந்தது. அதே வார்த்தைகள் மறுபடியும் அவன் நாவில் வருவதற்குத் துடித்தன. பல்லினால் நாவைக் கடித்துக் கொண்டு அந்த வார்த்தை வராமல் நிறுத்தினான்.

''பெண்ணே! இந்த உதவி நீ எனக்குச் செய்தால் உயிர் உள்ள அளவும் மறக்க மாட்டேன். என்றென்றும் நன்றி செலுத்துவேன். உனக்கு நான் இதற்குப் பிரதியாகச் செய்யக் கூடியது எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. நீ ஏதாவது செய்யும்படி சொன்னால், கட்டாயம் செய்வேன்!''

பூங்குழலி சிந்தனையில் ஆழ்ந்தாள். சொல்ல எண்ணியதைச் சொல்லலாமா, வேண்டாமா என்று தயங்கியதைப் போல் காணப்பட்டது.

''என்னால் உனக்கு ஆகக் கூடிய பிரதி உதவி ஏதேனும் இருந்தால் சொல்! நிச்சயம் செய்கிறேன்....''

''இது சத்தியமான வார்த்தைதானா?''

''சத்தியம்! சத்தியம்!''

''அப்படியானால், சமயம் வரும் போது சொல்லுகிறேன். அப்போது மறந்துவிட மாட்டாயே!''

''ஒரு நாளும் மறக்க மாட்டேன். நீ எப்போது பிரதி உதவி கேட்பாய் என்று காத்திருப்பேன். அதுவரையில் உனக்குக் கடன் பட்டிருப்பதாகவே எண்ணியிருப்பேன்.''

பூங்குழலி மீண்டும் சிறிது நேரம்





சிந்தனை வயப்பட்டிருந்தாள்.

''சரி; என்னுடன் வா! இந்தக் காட்டில் ஓரிடத்துக்கு உன்னை நான் அழைத்துப் போகிறேன். அங்கே இன்று பொழுது சாயும் வரையில் நீ இருக்க வேண்டும். பட்டினியாகத் தான் இருக்க வேண்டும்.....''

''அதைப் பற்றிக் கவலை இல்லை! காலையில் உன் அண்ணி பழைய சோறு போட்டாள். அவளுடைய வயிற்றெரிச்சலைக் கிளப்புவதற்காகவே அதிகமாகச் சாப்பிட்டேன். இனி இராத்திரி வரையில் சாப்பாடு தேவையில்லை....''

''இராத்திரி கூடச் சாப்பாடு கிடைக்கிறதோ, என்னமோ? கையில் கொஞ்சம் எடுத்து வரப் பார்க்கிறேன். நான் சொல்லும் இடத்தில் இருட்டும்வரை நீ இருக்க வேண்டும். இருட்டிய பிறகு, நான் திரும்ப வந்து ஒரு சத்தம் செய்வேன். குயில் 'குக்கூ' என்று கூவுவதைக் கேட்டிருக்கிறாயா?"

''நன்றாய்க் கேட்டிருக்கிறேன். அப்படிக் கேட்டிராவிட்டாலும், உன் குரலைத் தெரிந்து கொள்வேன்.''

''நான் குரல் கொடுத்ததும் நீ இவ்விடத்திலிருந்து வெளிவர வேண்டும். இருட்டி ஒரு ஜாமத்திற்குள் படகில் ஏறி நாம் புறப்பட்டுவிட வேண்டும்."

''குயிலின் குரல் எப்போது வரும் என்று காத்திருப்பேன்.''

காட்டின் மத்தியில் மணல் மேடு இட்டிருந்த ஓரிடத்துக்குப் பூங்குழலி வந்தியத்தேவனை அழைத்துப் போனாள். மேட்டின் மறு பக்கத்தில் மரஞ் செடிகொடிகள் மற்ற இடத்தை விட அதிக நெருக்கமாயிருந்தன. அவற்றை லாகவமாகக் கையினால் விலக்கிக் கொண்டு ஒரு மரத்தின் வழியாகப் பள்ளத்தில் இறங்கினாள். வந்தியத்தேவனும் அவளைப் பின்பற்றி இறங்கினான். அங்கே ஒரு பழைய மண்டபத்தின் மேல் விளிம்பு காணப்பட்டது. இன்னும் உற்றுப் பார்த்ததில் இருளடைந்த மண்டபத்தின் இரு தூண்கள் தெரிந்தன. இவை எல்லாவற்றையும் மரங்களும் செடிகொடிகளும் மறைத்திருந்தன. எந்தப் பக்கமிருந்து பார்த்தாலும் அந்த மண்டபம் அங்கே இருப்பது தெரியவே தெரியாது.

''இந்த மண்டபத்தில் ஒரு சிறுத்தை குடியிருந்தது. அது போன பிறகு நான் இதில் இருக்கிறேன். என்னுடைய சொந்தத் தனி வீடாக வைத்துக் கொண்டிருக்கிறேன். மனிதர்களைக் காணப் பிடிக்காதபோது இவ்விடத்துக்கு நான் வந்துவிடுவது வழக்கம். சட்டியில் தண்ணீர் இருக்கிறது! இன்று பகலெல்லாம் இங்கேயே இரு! நாலாபுறமும் மனிதர்கள் குரல் கேட்டாலும் குதிரைகள் ஓடும் சத்தம் கேட்டாலும் வேறு என்ன தடபுடல் நடந்தாலும் நீ வெளியில் தலைகாட்ட வேண்டாம். மேட்டின் மேல் ஏறிப் பார்க்க வேண்டாம்!'' என்று பூங்குழலி கூறினாள்.

''இருட்டிய பிறகும் இங்கேயே இருக்கச் சொல்கிறாயா? காட்டு மிருகம், — புலி, சிறுத்தை ஏதாவது வந்தால்?......'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''புலி, சிறுத்தை இங்கே ஒன்றும் இப்போது இல்லை. வந்தால் நரியும் காட்டுப் பன்றியும் வரும். நரிக்கும் பன்றிக்கும் பயப்பட மாட்டாயே!''

''பயம் ஒன்றுமில்லை. இருட்டில் வந்து மேலே விழுந்தால் என்ன செய்வது? கையில் வேல்கூட இல்லை. வீட்டில் வைத்து விட்டேன்.''

''இந்தா! இந்த ஆயுதத்தை வைத்துக்கொள்!'' என்று பூங்குழலி மண்டபத்தில் கிடந்த ஓர் ஆயுதத்தை எடுத்துக் கொடுத்தாள். அது ஒரு விசித்திரமான ஆயுதம். இருபுறமும் வாள் போல் கூர்கூரான முட்கள் இருந்தன. முட்கள் இரும்பைப் விடக் கெட்டியாயிருந்தன. இந்திரனுடைய வஜ்ராயுதம் இப்படித்தான் இருக்கும்போலும்!

''இது என்ன ஆயுதம்? எதனால் செய்தது?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''இது ஒரு மீனின் வால்! இந்த மண்டபத்தில் குடியிருந்த சிறுத்தை என் மீது பாய வந்தபோது இதனால் அடித்துத்தான் அதைக் கொன்றேன்!'' என்றாள் பூங்குழலி.



(தொடரும்)

**ப**ரீட்சைகள் முடிந்துவிட்டன. கழுதைகள் அவிழ்த்து விடப்பட்டன. தெருவில் பையன்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அமைதியான தெரு. சூரியனின் கிரணங்கள் சரிவாய் இறங்குகிற ஒரு சாயங்காலம். அனேகமாய் வசதியான வீட்டுப் பையன்கள். அசல் கிரிக்கெட் பேட்டும் பந்தும் சாத்தியமாகியிருந்தது. நல்ல அகலமான தார் ரோடு. வருடத்தில் இரண்டு முறை தார் போடுகிறார்கள். நீலச் சீருடையில் தொழிலாளர்கள் கஷ்டப்பட்டுத் தரை பெருக்கி வெற்றிலை துப்பிப் போகிறார்கள். குழாய்களில் தண்ணீர் வருகிற தெரு. தெரு விளக்குகள் எல்லாமும் எரியக் கூடியவை. அமைச்சர் சிவலை ஆறுமுகம் வீடு இந்தத் தெருவில் இருக்கிறது.

மெயின் ரோடு முனையில் பாச்சா பந்து வீச, பிள்ளையார் கோயில் முனையில் ரங்கன் ஆடிக் கொண்டிருந்தான். காம்பவுண்ட் சுற்றிய வீடுகள். ஃபீல்டர்கள் அதிகம் தேவைப்படவில்லை. விளையாடுகிறவர்கள் தவிர அம்பயராக ஓர் அரை டிராயர் பையன். மீதிப் பேர் மரத்தடியில் உட்கார்ந்திருந்தார்கள். தடிமனாய்க் கண்ணாடி போட்ட பையன் வர்ணனை என்பதாக வாய்க்கு வந்ததைக் கொட்டிக் கொண்டிருந்தான். பால்கனியில் கட்டைச் சீப்பால் தலையை வாரியபடி அவ்வப்போது நகத்து நுனியில் பேன் நசுக்கி, பெண்ணொருத்தி அசிரத்தையாய் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

தெருவில் விளையாடுவதில் கஷ்டங்கள் இருக்கின்றன. இரண்டு பக்கக் கண்ணாடி ஜன்னல்கள், ஸ்கூட்டரில் திரும்பும் அண்ணன்கள், காரியம் ஏவும் மாமிகள், கூப்பிடு தொலைவில் பெற்றோர்கள். ஆறு பந்துகளுக்கு இரண்டு சைக்கிள்கள் வீதம் ஆட்டம் தடைபட்டுக் கொண்டிருந்தது. பால்காரர்கள், பூக்காரிகள்... ஆடுகிறவர்



கள் அனைவரும் நினைவு கொள்ள வேண்டிய சுயக்கட்டுப்பாடு ஒன்று உண்டு. எந்தக் காரணம் கொண்டும் நாகராஜ ராவ் வீட்டுப் பக்கமாகப் பந்தை அடிக்கக் கூடாது. மஹா கோபக்காரர். சிரித்த முகமாக அவரைப் பார்த்தவர்கள் யாரும் கிடையாது. அவர் வீட்டில் பந்து விழுந்த ஒவ்வொரு தடவையும் முற்றத்தில் குண்டு விழுந்துவிட்ட மாதிரியே கத்தியிருக்கிறார். நாகராஜ ராவ் வீட்டில் குழந்தைகள் கிடையாது. அதனால் தான் இப்படியெல்லாம் கத்துகிறார் என்று ரங்கன் ஒரு நாள் சொன்னான். சிறிய குழந்தைகளிடம் இப்படியெல்லாம் கத்துகிறவர்களுக்கு என்னமாகப் பகவான் குழந்தை கொடுப்பான்? என்று அவன் அம்மா அபிப்ராயப்படுகிறாள்.

முதல் இன்னிங்க்ஸ் முடிந்துவிட்டது. பையன்கள் மரத்தடியில் கூடினார்கள். அந்தத் தடிமனாக் கண்ணாடி போட்ட பையன் எழுந்து சோம்பல் முறித்தான்.

''டிரிங்க்ஸ் டைம் விட்டுரலாமா?''

''உம். ஆனா சீக்கிரம் வரணும்.''

பாச்சா கிளம்பினான். கூடவே கிச்சாவும், ரங்கனும். வீட்டில் காப்பி தயாராக இருக்கும். அதற்கு ஒரு சின்ன ஓட்டப் பந்தயம் வைத்தார்கள். மூவரில் பாச்சாதான் குண்டு. அவன்தான் கடைசியில் வந்தவனும். அந்தப் பெரிய வீட்டின் பக்கவாட்டில் இருந்த சிறிய குடித்தனப் பகுதியொன்றில் பாச்சா நுழைந்தான். கால் கழுவிக் கொண்டு சமையலறைக்குப் போனான்.

''சனியன், காலைத் தொடச்சிண்டு வர்றதுக்கென்ன?'' என்றாள் அம்மா. பாச்சா திரும்பிப் பார்த்தான். தரையில் ஈரக் கால்களின் கிருஷ்ண ஜெயந்தி. காப்பி குடித்து முடிப்பதற்குள் அப்பா வந்துவிட்டார்.

''கடிதாசு ஏதாவது வந்துதா?''

''இல்லே.''

''அவன் எங்கே? உன் பிள்ளை?''

''காப்பி குடிச்சிண்டிருக்கான்.''

''மூஞ்சி அலம்பிண்டு படிக்க உட்காரச் சொல்லு.''

''படிக்கிறதுக்கா?''

''உம். அடுத்த வருஷத்துப் பாடம்'' என்றார் அப்பா. சமையலறைக்கு அம்மா வந்தபோது பாச்சா அங்கு இல்லை.

குளிர்பான இடைவேளைக்குப் பிறகு ஆட்டம் ஆரம்பமானது. முதலில் அந்தத் தடித்த கண்ணாடிப் பையன். முதல் பந்தில் மரத்தடி திரும்பினான். அடுத்ததாகப் பாச்சா களத்தில் இறங்கியபோது கைதட்டல் ஒலி கேட்டது. பாச்சாவின் தம்பி கைதட்ட வேண்டும் என்று எச்சரிக்கப்பட்டிருந்தான். ஓர் ஓவர் முடிந்தது. பாச்சாவுக்குத் தெம்பு வந்தது. முதல் ஓவர்தான் கண்டம். அது முடிந்துவிட்டால் அப்புறம் இரண்டு, மூன்று ஓவர்களாவது ஆடி விட முடிகிறது. ஆனால் இன்றைக்குப் பாச்சாவின் நாள். இருபத்தி மூன்று ரன்கள். நாட் அவுட். கால் நூறு தாண்டும்போது சாஸ்திரப்படி ஒரு பவுண்டரி அடிக்க வேண்டும். அதை முயற்சி செய்யும்போது பந்து. அமைச்சர் சிவலை ஆறுமுகத்தின் வீட்டிற்குள் விழுந்துவிட்டது.

ஆட்டம் பாதியில் நின்றது. யாருக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. 'இந்த மாதிரி ஏற்கெனவே நடந்ததற்கு முன்னுதாரணம் உண்டா?' என்று கிச்சா கேட்டான். அந்தக் கண்ணாடிப் பையன் உதட்டைப் பிதுக்கிக் கொண்டான்.

தெருவிலேயே அமைச்சர் சிவலை ஆறுமுகத்தின் வீடுதான் பெரியது. அமைச்சரான பிறகு ஒருமுறை காம்பவுண்ட் சுவரை உயர்த்திக் கட்டினார்கள். அந்த வீட்டில் எப்போதும் ஏதாவது நடந்தபடியே இருக்கும் கறுப்புக் கண்ணாடி ஏற்றிய அம்பாசிடர்கள் நாள் நெடுக வந்து போகும். பெரிய தலைகள் தென்படும். சுற்றுலா பஸ்களில் ஆட்கள் வருவார்கள். கையில் கட்சிப் பேப்பர் வைத்திருப்பார்கள். வர்ணக் கரைகளில் துண்டு போட்டிருப்பார்கள். தொய்யத் தொய்யத் தரை துடைக்கும் துண்டு. பக்தியுடன் பேட்ஜ் குத்தியிருப்பார்கள். எல்லோரும் இறங்கிய பிறகு இரண்டு பேர் மட்டும் உள்ளே போவார்கள். இரண்டு பேரும் தோளுக்கடியில் பை இடுக்கியிருப்பார்கள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பால்கனியில் ஒருத்தர் வந்து அமைதியாய் இருக்கும்படி சைகை காட்டுவார். இறங்கியவர்களை இயற்கை அழைக்கும். எங்கு ஒதுங்கலாம்? இங்கிட்டு ஒண்ணுக்கிருக்கக் கூடாதென வாயிற்காப்போன் விரட்டுவான். தெரு முனையில் மின்சார வாரியப் பெட்டி இருக்கிறது. பஸ் அருகில் குரல் கிளம்பும்: தலைவர் சிவலை ஆறுமுகம் வாழ்க! வாரியத்து வெள்ளைப் பெட்டியின் பின்னால் இருந்து கும்பலொன்று அலங்கோலமாய் ஓடி வந்து சேர்ந்து கொள்ளும். மாலைகள். கும்பலுக்கேற்ற உரை.

''விவசாயிகளே!

என் தந்தை ஒரு விவசாயி. நான் ஒரு விவசாயி மகன். நான் சாமான்யன். உங்களில் ஒருத்தன். மதுரையிலிருந்து வந்திருக்கிறீர்கள். நான் மதுரையில் பெண் எடுத்தவன். என் மனைவிகளில் ஒருத்தி மதுரைப் பக்கம். நான் உங்கள் சொந்தக்காரன். உங்கள் வீட்டுப் பிள்ளை.''

மத்தியில் கொஞ்சம் நாட்கள் அமைச்சராக இல்லாதபோதும் சிவலை ஆறுமுகம் வீட்டில் ஆர்ப்பாட்டங்கள் இல்லாமல் இல்லை. அவரைக் கைது செய்யக் கூடும் என்ற செய்தி அடிபட்டபோது தெரு முழுவதும் ஜனம் திரண்டுவிட்டது. மண்ணெண்ணெய் வாசனையுடன் ஒருவன் பற்ற வைத்துக் கொண்டு எரிந்து போனான். அமைச்சர் சிவலை ஆறுமுகத்தின் வீட்டில் எப்போதும்

ம. வே. சிவகுமார்




# ஒற்றுமை!

கர்நாடக மாநிலம் ஹசன் மாவட்டத்தில் கனிஹல்லி என்னும் கிராமத்தைச் சேர்ந்த ஏழை விவசாயி ஒருவர் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்தாததால், நிலவள வங்கி அவரது நிலத்தை ஏலத்துக்குக் கொண்டு வந்தது. அக்கிராம மக்கள், ஒற்றுமையாக இருந்து அந்த நிலத்தைப் பதினைந்து பைசாவுக்குமேல் ஏலத்தில் கேட்கவில்லை! எனவே ஏலம் விடுவது கைவிடப்பட்டது!

ஆதாரம்: ஸண்டே தகவல்: கீதா பஞ்சு

---

ஏதாவது நடந்தபடியே இருக்கும். இன்றைக்குப் பாச்சா அடித்த பந்து அங்கே போய் விழுந்துவிட்டது.

**பை**யன்கள் நடுத் தெருவில் நின்றிருந்தார்கள். பாச்சாவின் அப்பா பக்கத்துப் போர்ஷனில் இருந்து வெளிப்பட்டார். பாச்சா திரும்பிப் பார்த்தான். சிவலை ஆறுமுகத்தின் வீட்டை நோக்கித் திமுரென்று நடக்க ஆரம்பித்தான். பந்து அவனுடையது. அப்பா, பாச்சாவை ஒவ்வொரு தவறுக்கும் பிரத்தியேகமாய்த் தண்டிக்க மாட்டார். மனத்துக்குள்ளாகத் தவறுகளுக்குக் கணக்கு வைத்துக் கொள்கிறார். அப்புறம் ஒருநாள் தீர்ப்பு நாள். இன்றைக்குப் பந்து தொலைவதேகூட உச்சத் தவறாக அமையலாம்.

''ஏய் கூர்க்கா'' என்றான் பாச்சா.

''என்ன?'' என்றான் வாட்ச்மேன். தமிழ்க் குலக் காவலன் — சிவலை ஆறுமுகம் வீட்டு வாயிற் காவலன்.

''பந்து உள்ளே விழுந்துடுத்து.''

''என்னன்னு கூப்பிட்டே?''

''கூர்க்கான்னு...''

''அதுக்கு முன்னாலே?''

பாச்சா சிறிது நேரம் யோசித்தான்.

''ஏய்.''

''ஏய்யின்னா கூப்பிட்டே? ங்கொப்பனா வெச்சுச் சோறு போடறாரு?'' — பாச்சா அப்படியே நின்றிருந்தான்.

''வாயிலே என்னடா கொளுக்கட்டையா?'' என்றான் வாட்ச்மேன்.

''எனக்குப் பந்து வேணும்.''

''மொதல்ல மன்னிப்புக் கேளு. ஏய்னு கூப்பிடுறியே! மரியாதை தெரியாது?''

பாச்சா திரும்பிப் பார்த்தான். தெரு நடுவில் எல்லாப் பையன்களும் நின்று இங்கேயே பார்த்துக் கொண்டிருந்தார்கள். வீட்டு வாசலில் அப்பா பக்கத்தில் இப்போது அம்மாவும் நின்றிருந்தாள்.

''பந்தைக் கொடு. நான் போகணும்.''.

வாட்ச்மேன் கதவைக் கொஞ்சம் திறந்து விட்டான்.

''போ... போய் எடுத்துக்க.''

பாச்சாவுக்குப் பயமாய் இருந்தது. இதில் ஏதோ சூது இருக்கிறது.

''எடுத்துக்க போ.''

பாச்சா தயங்கி நின்றான். அனேகமாய் எல்லா வீடுகளின் பெரியவர்களும் வெளியே வந்துவிட்டார்கள். அப்பாவின் பக்கத்தில் வக்கீல், ஆடிட்டர், மாமாக்கள் நின்று கொண்டு மொத்த பேரும் இந்தப் பக்கம் பார்த்தார்கள்.

''எடுத்துக்க போ.''.

அமைச்சர் வீட்டு அல்சேஷன் பெரியதாகக் குரைத்தது.

''ராமசாமி, என்ன அந்தப் பையனோட வெவகாரம்?'' நாசி சப்தம் பிரதானமாய்க் கனத்த குரல் ஒன்று வந்தது. அமைச்சர் சிவலை ஆறுமுகம் போர்ட்டிகோவில் இறங்கி நின்றார். நல்ல உயரம். கழுத்தின் மைனர் செயின் பளபளத்து, ஜிப்பாவின் கழுத்தடியில் காணாமல் போனது. கைத்தறித் துண்டில் துடைக்கக் கண்ணாடியைக் கழற்றினார். தங்க ஃப்ரேம் கண்ணாடி. உள்ளங்கையில் வைத்து ஊதி நுனித் துண்டில் துடைத்து அணிந்தார். பாச்சாவின் அப்பா இப்போது தெருவுக்கே வந்துவிட்டார்.

''விளையாடச் சொல்ல பந்து உள்ளார விளுந்துடுச்சு'' என்றான் வாட்ச்மேன்.

''எங்கே விளுந்துச்சு?''

''தோ... அங்க. எடுத்தாரேன்.''

''இரு.''

ஆறுமுகம் கையமர்த்தினார். தோட்டத்தில் விழுந்த பந்தை அவரே தேடி எடுத்தார். தென்னை மரத்தடி ஈரம் ஒட்டியிருந்தது. நாசூக்கான தட்டல்களில் மண் உதிர்ந்தது.

''இந்தா தம்பி.''

முதுகில் தட்டிக் கொடுத்தார்.

தென்றல் காற்று கொஞ்சம் தெரு முழுவதும் வீசியது. வீட்டிற்குள் போவதற்கு முன் சிவலை ஆறுமுகம் வாட்ச்மேனைப் படியில் நிறுத்தினார்.

''எதுனாச்சும் இருக்காய்யா உம் மண்டையிலே? அத்தனை பேர் பார்க்கச் சொல்ல இப்படிப் பண்ணறியே? ஒருத்தனும் ஓட்டுப் போட மாட்டாங்க.... பேமானிப் பசங்க...''



# டாக்டருக்கு ஆபரேஷன்!



● டாக்டர் எம். எஸ். வேங்கடராமன்

எப்பொழுதும் போல்தான் அன்றைக்கும் மூன்று செட் டென்னிஸ் விளையாடிவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். ஆனால் என்றைக்கும் இல்லாத மாதிரி அன்று மட்டும் உடல்நிலை வித்தியாசமாக இருப்பதை உணர்ந்தேன். ஒரு டாக்டரான எனக்கு அன்றைய சோர்வுக்கான காரணம் என்ன என்பது புரிய வெகு நேரம் ஆகவில்லை. என் இதயத்தில் ஏதோ கோளாறு இருக்க வேண்டும்! நான் நினைத்த படியே இதயத்தில் திடீரென்று படபடப்பு ஏற்பட்டு, 'லப் டப் லப் டப்' என்று சீராக இருக்க வேண்டிய இதயத் துடிப்பு,ஒரு தாள வாத்தியக் கச்சேரி போல் பல ஜதிகள் பேச ஆரம்பித்தது. இது நடந்தது 1985 டிசம்பர் மாதத்தில். 1987 ஆரம்பத்திற்குள் இதே அனுபவம் ஐந்தாறு முறை ஏற்பட்டு, ஒவ்வொரு முறையும் ஆஸ்பத்திரியில் சில தினங்கள் தங்கி, சிகிச்சை பெற்றுத் திரும்பும்படி ஆயிற்று.

நடுத்தர வயதை எட்டி விட்டதால் நான் வழக்கமாக வருடாந்திர மருத்துவப் பரிசோதனைக்குப் போகும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தேன். அத்தகைய ஒரு பரிசோதனையின்போது எனது இதயத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்று சந்தேகித்து மேலும் சில பரிசோதனைகள் செய்து கொள்ளச் சொன்னார் டாக்டர். அப்பரிசோதனை முடிவுகள், இதயத்தின் இடது பக்கத்தில் ஒரு வால்வின் வாய் சற்றுக் குறுகியிருப்பதை உணர்த்தின. ஆனால் மற்றபடி இதயத் துடிப்பும், இதயத்திற்கு வரும் ரத்த ஓட்டமும் சரியாக இருந்ததால் நான் என் வழக்கப்படி அறுவைச் சிகிச்சைகள் செய்வதிலும், டென்னிஸ் ஆடுவதிலும் ஈடுபடலாம் என்று டாக்டர்கள் கூறியிருந்தனர். அவர்கள் அளித்த தைரியத்தில் நானும் தொடர்ந்து நான் தவறாமல் டென்னிஸ் ஆடி வந்தேன். ஆனால் எனது இதயத்தால் டென்னிஸ் ஆட்டத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை என்பதை அடிக்கடி தோன்றிய 'தாள வாத்தியக் கச்சேரிகள்' ஊர்ஜிதப் படுத்திவிட்டன!

எனக்குத் தவறான அறிவுரை வழங்கிய மருத்துவர்களை நான் நொந்து கொண்டு வேலூரில் உள்ள நிபுணரிடம் சென்று முறையிட்டேன். அவர், "நீ என்னுடன் டென்னிஸ் ஆடினால் பரவாயில்லை; ராதிகா கிருஷ்ணன் போன்ற டென்னிஸ் வீராங்கனைகளுடன் ஆடினால் அப்படித்தான்!" என்று கிண்

டல் செய்ததோடு எனது டென்னிஸ் ஆட்டத்துக்குத் தடை விதித்தார்.

இருப்பினும் தாள வாத்தியக் கச்சேரிகள் என் இதயத்தில் அரங்கேறுவது நிற்கவேயில்லை. மாறாக அவை அடிக்கடி தோன்ற ஆரம்பித்தன. என் மகளின் திருமணத்திற்குச் சில தினங்களே இருந்த போது மீண்டும் ஓர் ஆஸ்பத்திரி யாத்திரை செய்ய வேண்டியதாகப் போயிற்று. அப்போதுதான் நான் ஒருமுறை அமெரிக்கா சென்று, அங்குள்ள இதய நோய் நிபுணர்களின் அறிவுரையைப் பெற வேண்டும் என்று யோசனை வழங்கினார் எனது மருத்துவர்.

''அங்கே அவர்கள் ஆபரேஷன் செய்து கொள்ளச் சொன்னால்...?''

''செய்து கொள்ளுங்கள்!'' என்று சலனமின்றிப் பதில் சொல்லி விட்டார் எனது மருத்துவர்.

ஒரு டாக்டர் வியாதியுற்றால், அந்த வியாதியினால் என்னென்ன கோளாறுகள் ஏற்படும், எதிர்பாராமல் என்னென்ன நடக்கக் கூடும் என்பன போன்ற நினைவுகளே அவரைக் கதிகலங்கச் செய்யப் போதுமானவை. எனக்கு அந்த நினைவுகளுடன் இன்னும் ஒரு மனச்சோர்வும் ஏற்பட்டிருந்தது: சிகரெட், மது போன்ற எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாத எனக்கு ஏன் இதயக் கோளாறு வரவேண்டும்? என்ற கேள்வி தூண்டிய மனச்சோர்வுதான்! குடும்பத்தாரிடம் முழு விவரங்களைச் சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் நான் தவித்த போது எனக்குத் தைரியமூட்டி, ஊக்குவித்தவர்கள் நண்பர்கள்தான்!

**வி**மானப் பயணத்தின் போது இருதயம் வம்பு பண்ணினால் என்ன செய்வது என்ற பயத்தில், தேவையான மருந்து, இஞ்ஜெக்ஷன் ஆகியவற்றை எடுத்துக் கொண்டிருந்தேன். விமானத்தில் டாக்டர் ஹாண்டேயின் மகன் (அவரும் ஒரு டாக்டர்) என்னுடன் பிரயாணம் செய்தது எனக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது. நல்லவேளையாக அவரது சேவைக்குத் தேவை இல்லாமல் போயிற்று.

ஹூஸ்டன் போய்ச் சேர்ந்த இரண்டாம் நாள் டாக்டர் டென்டன் கூலியின் உதவியாளர் டாக்டர் வீரேந்திர மாதூர் என்னைப் பரிசோதித்து, இதயத்தில் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஹூஸ்டனில் மனைவியுடன் என் மைத்துனர் வீட்டில் தங்கியிருந்தேன். அப்போது தற்செயலாக **'Surgeon under the knife'** என்ற புத்தகத்தை நான் படிக்க நேர்ந்தது. அதனை எழுதிய ஒரு புகழ்பெற்ற மருத்துவர் ஓர் அறுவைச் சிகிச்சை நிபுணர். என்னைப் போலவே அவருக்கும் டென்னிஸ் ஆடும்போது நெஞ்சு வலி ஏற்பட்டு, ஆபரேஷன் செய்ய வேண்டியதாகப் போயிற்று. தமக்கு நடந்த ஆபரேஷனைப் பற்றிய விவரங்களை அதில் விரிவாக எழுதியிருந்தார். அமெரிக்க மருத்துவமனைகளில் உள்ள பொதுவான சில குறைகளை அந்த நூலில் குறிப்பிட்டிருந்ததுடன் , ஒபன் ஹார்ட் ஆபரேஷனின் போது மருந்து கொடுத்து இதய ஓட்டத்தை நிறுத்தி விடுவார்கள்; ஆபரேஷன் முடிந்த பிறகு அதனைத் திரும்ப இயங்கச் செய்யும் முயற்சியில் ஐந்து சதவிகிதம் தோல்விக்கும் இடம் உண்டு போன்ற விவரங்களையும் அவர் ஒளிவு மறைவின்றித் தெளிவாக எழுதியிருந்தார்.

டாக்டர் மாதூர் எனக்கு ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று கூறியதும் இந்தப் புத்தகம்தான் முதலில் நினைவுக்கு வந்தது. ஆனால் அப்புத்தகம் ஏற்படுத்திய பயத்தை எய்ட்ஸ் பற்றிய பயம் தூக்கிச் சாப்பிட்டு விட்டது! ஆமாம், ஆபரேஷன் என்றால் ரத்தம் ஏற்றுவார்கள்; அமெரிக்கர்களின் ரத்தத்தை ஏற்றுக் கொண்டால் எய்ட்ஸ் வரும் அபாயம் இருக்கிறதே!

இந்தப் பிரச்னையைச் சமாளிக்க எனக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றியது. அமெரிக்காவில் உள்ள ஒரு கிறிஸ்துவ மதப் பிரிவினர் பிறரிடமிருந்து ரத்தத்தை ஏற்பதில்லை அவசியமானால் தங்கள் உடலிலிருந்து முன்கூட்டியே ரத்தத்தை எடுக்கச் செய்து தங்களுக்கே அதைத் திரும்பவும் செலுத்திக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்கின்றனர். நானும் இவ்வாறே செய்யத் தீர்மானித்தேன். அதன்படி ஆபரேஷனுக்கு ஆறு தினங்களுக்கு முன்னால் என் உடலிலிருந்து ஆயிரம் மில்லி இரத்தத்தை எடுத்துக் கொண்டு ஆபரேஷனுக்குப் பிறகு எனக்கே அதைத் திருப்பிச் செலுத்துவதற்காகச் சேமித்து வைத்தார்கள்.

**ஏ**ப்ரல் பன்னிரண்டாம் தேதி செயின்ட் லூக்ஸ் மருத்துவமனையில் சேர்ந்தேன். அன்று (ஞாயிற்றுக்கிழமை) இரவு டாக்டர் கூலி என்னைப் பார்க்க வந்த போது

அண்மையில் மேற்கு வங்க சட்டமன்ற கூட்டத் தொடரின்போது, சபை நடவடிக்கைகள் ஓரிரு நிமிடங்களுக்கு நடக்கவில்லை! மைக் ஆபரேட்டர் தன்னுடைய ஏ.சி. அறையில் நாற்காலியில் அமர்ந்தபடியே உறங்கிவிட்டதுதான் காரணம்!

ஆதாரம்: ஸண்டே

தகவல்: கீதா பஞ்சு



"இருபத்திநாலு மணி நேரத்தில் நடவடிக்கை எடுக்கவும்னு ஒரு ஃபைலை அனுப்பினேனே... நடவடிக்கை எடுத்துட்டீங்களா?"

"ஓ... ஃபைலை எட்டு மணி நேரத்துக்குள் தொலைக்கச் சொல்லிட்டேனே!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா



மணி பதினொன்று! அப்போதுதான் அவருக்கு நேரம் கிடைத்தது! உழைப்புக்கு ஒரு மனிதர் என்றால் அது டாக்டர் கூலியைத் தவிர வேறு யாராக இருக்க முடியும் என்று வியந்து போனேன்.

மறுநாள் மேலும் சில பரிசோதனைகளைச் செய்தார் டாக்டர் மாதூர். இரண்டு தொடைகளிலும் இரண்டு ஊசிகளைச் செருகி அவை வழியே இதயத்தின் வலது, இடது பக்கங்களுக்கு இரண்டு குழாய்களைச் செலுத்தி, பழுதான வால்வைச் சோதித்தார். இதயத்துக்குப் போதுமான அளவு ரத்த ஓட்டம் கிடைக்கிறதா என்றும் சோதித்தார். இச்சோதனைகள் செய்யப்படுவதை என் எதிரே இருந்த டி. வி. திரையில் நானே பார்த்துக் கொண்டேன்! மருத்துவமனையின் ஒவ்வோர் அறையிலும் டி. வி. இருந்தது. அதில் ஒரு சானலில், அந்த மருத்துவமனையின் பல்வேறு பகுதிகளில் செய்யப்படும் பரிசோதனைகளைப் பார்க்க முடிந்தது. நோயாளிகளின் பயத்தைப் போக்கவே இந்த ஏற்பாடு!

பரிசோதனைகள் முடிந்து, மதியம் டாக்டர் மாதூர் என்னிடம் பேசினார். "பழுதாகியிருக்கும் வால்வைச் சரி செய்து விடலாம். அதில் சிக்கல் ஏதும் இராது." என்றார். நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். ஏனென்றால் பழுதுபட்ட வால்வுக்குப் பதில் செயற்கையான மாற்று வால்வு பொருத்தும் ஆபரேஷன் செய்து கொண்டால், ரத்தம் உறைந்து போகாமல் இருக்க ஆயுள் முழுவதும் ஒரு மருந்தை உட்கொள்ள வேண்டி வரும் என்பது எனக்குத் தெரியும். தவிர அவ்வப்போது ரத்தப் பரிசோதனை செய்து கொள்ள வேண்டியிருக்கும்; உடலுக்கு அதிர்ச்சி, அலுங்கல், ஏதும் ஏற்படக் கூடாது... நல்ல காலமாய் இந்த ஹிம்சையிலிருந்து தப்பினேம் என்று நினைத்துக் கொண்டிருந்த போதே டாக்டர் மாதூர் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

"உங்கள் இதயத்துக்கு வருகிற ரத்த ஓட்டம் போதவில்லை. ஒரு ரத்தக் குழாயில் தொண்ணூறு சதவிகிதம் அடைப்பு இருக்கிறது. அதனால் பைபாஸ் ஆபரேஷனும் செய்ய வேண்டும்" என்றார்.

எனக்கு ஒரு நிமிடம் முதுகுத் தண்டு சில்லிட்டது! தொண்ணூறு சதவிகித அடைப்பு என்பது எந்தக் கணமும் நூறு சதமாக மாறியிருக்கலாம். அந்த வினாடியில் நான் டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தாலும் சரி, தூங்கிக் கொண்டிருந்தாலும் சரி, ஏன் ஒரு நோயாளிக்கு ஆபரேஷன் செய்து கொண்டிருந்தாலும் கூட ஹார்ட் அட்டாக் ஏற்பட்டிருக்கும். என் உயிர் உடம்பிலிருந்து பிரிந்திருக்கலாம். ஹூஸ்டனுக்கு வந்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று!

அன்றிரவு டாக்டர் கூலி இரண்டாம் முறையாக என்னைப் பார்க்க வந்தார். மறுநாள் ஆபரேஷன் செய்யப் போவதாகச் சொல்லிக் கைகுலுக்கி விடைபெற்றார். அவர் சென்ற பிறகு நான் பலவித யோசனைகளில் ஆழ்ந்து போனேன். இதுவரை வாழ்ந்த ஐம்பது வருட வாழ்க்கையில் என்னத்தைச் சாதித்தேன்? பிறருக்கு உபயோகமாக இருந்தேனா? மனைவி, குழந்தைகளுக்கு என் கடமைகளைச் சரிவரச் செய்தேனா? போன்ற கேள்விகள் என்னுள் தோன்றின. அப்படியே தூங்கிப் போனேன்.

காலையில் ஆபரேஷனுக்கு என்னைத் தயார் செய்தார்கள். அப்போது மிகவும் அமைதியாகவும் சந்தோஷமாகவும் நான் உணர்ந்தது எனக்கே சிறிது ஆச்சரியத்தை அளித்தது. உலகப் புகழ் டாக்டர் கூலியிடம் ஆபரேஷன் செய்து கொள்ளக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே என்று நினைத்துக் கொண்டேன். கூடவே, என்னிடம் ஆபரேஷன் செய்து கொண்டவர்கள் என்னைப் பற்றி இப்படி நினைத்துக் கவலையின்றி இருந்திருப்பார்களா? என்று என் உள்மனம் கேட்டது. மனத்தின் இன்னோர் ஓரம் குடும்பத்தார் ஒவ்வொருவரையும் தனித்தனியே பெயர் சொல்லிக் கூப்பிட்டு "டாடா, பை! பை!" என்று விடைபெற்றுக் கொண்டிருந்தது. இவ்வளவும் சில நிமிட ஸ்ட்ரெச்சர் சவாரியின் போது மனத்துக்குள் அரங்கேறி முடிந்து விட்டன.

ஆபரேஷன் தியேட்டரில் ஒரு மினி பாரத விலாஸைக் கண்டு பூரித்தேன். உ.பி.யைச் சேர்ந்த டாக்டர் மாதூரைத் தவிர, பம்பாயைச் சேர்ந்த மயக்க மருந்து நிபுணரும், கேரளாவைச் சேர்ந்த நர்ஸும் இருந்தனர். மேலே இருந்து வெளிச்சம் சிந்திய இரண்டு ராட்சஸ விளக்குகளையும், சுற்றிலும் மின்னிய வெள்ளை வெளேர் சுவர்களையும் பார்த்துக் கொண்டேயிருக்கையில் மயக்க மருந்து தரப்பட்டு நினை

விழுந்தேன். ஆபரேஷன் நான்கரை மணி நேரம் நீடித்ததாகப் பின்னர் அறிந்தேன். நினைவு தெளியும் வரை ஒரு நிம்மதியான தூக்கத்தில், கனவுகளில்லாத நித்திரையில் ஆழ்ந்து கிடந்ததைப் போலவே உணர்ந்தேன். இரண்டரை மணி நேரத்துக்கு எனது இதய இயக்கம் நிறுத்தி வைக்கப்பட்டுப் பிறகு மீண்டும் துவக்கப்பட்டதைச் சுய நினைவு திரும்பிய பிறகு சொன்னார்கள். நான் கண் விழித்தபோது டாக்டர் கூலி என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். உடலில் எங்கு பார்த்தாலும் குழாய்கள். எட்டு குழாய்கள் எண்ணியதாக ஞாபகம்!

ஆபரேஷனுக்குப் பிறகு ஹூஸ்டன் ஆஸ்பத்திரியில் அவர்கள் என்னைக் கவனித்துக் கொண்ட விதத்தை மறக்கவே முடியாது. அவ்வப்போது நர்சுகள் வந்து, 'பெருமூச்சு விடு, கையை நீட்டு, காலை மடக்கு' என்று கூறி உடலை அசையச் செய்தார்கள். இரண்டு மணி நேரங்களுக்கு ஒருமுறை உடம்பையே புரட்டிப் போட்டுத் தலையணைகளைச் சரி செய்து அண்டை கொடுத்தார்கள். வலியெல்லாம் பறந்து போய்ச் சுகமாகத் தூக்கம் வந்தது.

ஆபரேஷன் முடிந்த மூன்றாவது நாள் தீவிர கவனிப்புப் பிரிவிலிருந்து பழைய அறைக்குத் திரும்பினேன்; ஐந்தாம் நாள் நடக்க ஆரம்பித்தேன்; ஏழாம் நாள் இரண்டு மைல் தூரம் நடந்தேன்! அறையின் வாசலில் அன்றன்றைக்கு நடந்த தூரத்தைக் குறிக்க ஓர் அட்டவணையைத் தொங்க விட்டிருந்தார்கள் — இது நோயாளிகளை நடக்க ஊக்குவிக்கும் பொருட்டு! காலை ஆறு மணி முதல் இரவு பதினொரு மணி வரை இரண்டு மணி நேர இடைவெளியில் நர்சுகள் வந்து கவனித்துப் போனார்கள். டாக்டர் மாதூர் தினமும் வந்தார். மூன்றாவது நாளுக்குப் பிறகு டாக்டர் கூலி அந்தர்த்தியானம் ஆகிவிட்டார். அவ்வளவு பிஸி! எனக்கு நினைவு தெரிந்து நான் அவருடன் பேசிப் பழகிய நேரம் வெறும் ஐந்து நிமிடங்கள்தான். ஆனால் இன்று நான் புதிய மனிதனாக நடமாடக் காரணம் அந்த அற்புத மனிதரின் அபார கைத்திறமைதான்.

இப்போது ஒரு புதிய சக்தியை என் உடலில் உணர்கிறேன். தாள வாத்தியக் கச்சேரிகள் போன இடம் தெரியவில்லை!

— டாக்டர் எம். எஸ். வேங்கடராமன்

## அடுத்த இதழில்...



**வரலாறு படைப்பாரா வி.பி.சிங்?**

—அட்டைப்படக்கட்டுரை

**நாற்பதாண்டு சுதந்திரத்தில் நாடு கண்டதென்ன?**

—ஆய்வு

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.

'என் பிள்ளையைக் கூட்டிக் கொண்டு போ' என்று சொல்லவில்லை. 'உன் புருஷனைக் கூட்டிக் கொண்டு போ' என்று அவன் அறுத்துவிட்டாள்.

இது விவேகமா, இல்லை ஆங்காரமா?

இனி இது எனக்கு வசப்படாது. பிறர் சொத்து — என்னைக் காட்டிலும் உனக்கு அதிக உரிமை உண்டு. இவ்வளவுதான், இப்படித்தான் எனக்கு விதித்தது என்கிற நிஷ்டூரமா?

எட்டடி தூரத்தில் இருக்கும் சுவரையே அம்மா பார்த்துக் கொண்டிருந்தாலும் அவள் மனசு வெகு தூரம் எட்டிப் போய்க் கைகட்டி நின்றுவிட்டது தெரிகிறது.

இனி இந்த க்ஷணம் எந்தப் பக்கம் சாய்வது என்பதை முரளிதான் தீர்மானம் செய்ய வேண்டும். தீர்மானித்தல் புருஷ லட்சணம். இடம், வலம் இரண்டும் சீர் தூக்கிப் பார்த்து எங்கே எப்போது என்ன செய்ய வேண்டும் என்று முடிவு கட்டுவது ஆணின் கடமை. அழகு. இது ஆணுக்குப் பெரிய சுமை. பேரவஸ்தை.

அடிமையாய் இருந்து விடுவதில் சௌகர்யம் உண்டு. அரசனாக வேண்டுமெனில் முடிவு செய். தீர்மானம் பண்ணு. இடதா வலதா இப்போதே சொல். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வேலையிலும் தீர்மானம் செய். முடிவெடுப்பது சிரமம் இல்லை. எவர் மனசும் நோகாமல், தர்ம நியாயம் பார்த்து, சுற்றுச் சூழ்நிலை புரிந்து, தொலைநோக்கோடு முடிவு செய்வது ஒரு வேதனை.

பெண்ணுக்கு இந்தப் பாரம் இல்லை. வாழ்க்கையைப் பிறர் கையில் ஒப்படைத்துக் கட்டளைக்குக் காத்திருப்பவருக்கு இந்த வேதனை இல்லை. ஆணுக்குத்தான் வாழ்க்கை சிரமம்.

காசு சம்பாதி, காவல் தொழில் செய். கருணை மனுக்களை முற்றிலும் கவனித்துக் கட்டளைகள் போடு. அதைக் கருணையோடு யோசி. கட்டளையைக் காதலோடு சொல். கலவியில் காமம் தீர்க்கும் வன்மை காட்டு. சுமந்து பெத்தது தரையில் நழுவினதும் அதற்கும் சோறு போடு. அதைக் கவனமாய்க் காவல் காத்து வா. நிற்காதே. ஓடு, காசு சம்பாதி. நிறைய நிறைய, கை நிறைய கொண்டு வா.

அம்மா என்கிற பெண், மனைவி என்கிற பெண், சகோதரி என்கிற பெண், மகள் என்கிற பெண், கேரம்போர்டின் நாலு மூலைகளில் நாலு ஓட்டைகள். அத்தனை வாயிலிலும் அன்பும் பொருளும் கொண்டு வந்து தள்ளு. கடைசியில் வெள்ளை ஸ்டிரைக்கராய்க் கடைசியில் வெறுமே நில். எதிரும் புதிருமாய் அடிபடு. முட்டு. மோது. ஓடு.... ஓடி ஓடிக் காசு கொண்டு வா. நாலு மூலையிலும் வாரியிறை.



இல்லையெனில் நீ தண்டம். நாலு மூலையுமே தூற்றும்.

பெண்ணாய்ப் பிறந்திருக்கலாம். 'எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலை' என்று மலங்க மலங்க விழித்து நிற்கலாம்.

ஆண் விழித்து நிற்க முடியாது. ஆண் கையைப் பிசைந்து நிற்பது எள்ளல் தரும் விஷயம்.

"அம்மா! நம்ம வீட்டில் ப்ரைவஸி போறுதுங்கறது ஒரு விஷயம்தாம்மா..."

"நான் வேணு வாசல்ல வெளித் திண்ணையில் படுத்துக்கறேன்."

எப்படி முடியும்? இது என்ன பதில்.... அம்மாவைத் திண்ணையில் படுக்க வைத்து விட்டு, அகமுடையாளும், பொண்டாட்டி

# நிழல் யுத்தம்



யும்.... பேச்சு வராதா.... இல்லே. பேச்சு வரத்தான் திண்ணைக்குப் போகிறேன் என்கிறாயா....

"எதுக்கும்மா" முரளி மென்மையாய்க் கேட்டான். "அவர்கள் வீடு சௌகர்யமாய் இருக்கே!"

"சரி, அங்கேயே போய் இரு."

"பளீர்னு அறைஞ்சாப்பல பேசறயே..."

"சரி, வந்துண்டு போயிண்டிரு."

"வேறே வீடு பார்க்கறேன். பெரிசா உனக்கும் சௌகர்யமா..."

"எனக்கு இது போதும்."

"வேறே வீட்டுக்கு வரமாட்டியா?"

"அவன் வேறே, நான் வேறேன்னு சொல்லிட்டா உம் பொண்டாட்டி. நீ அங்கேயே இரு."

"கோவமா பேசறியா?"

"என்ன நினைச்சேனோ, அது நடக்கிறது. அப்புறம் கோவம் என்ன?"

"முடிவா ஒரு பதில் சொல்லு."

"நீ போ!"

"போயிட்டு வான்னு சொல்ல மாட்டியா?"

முரளி கெஞ்சினான். ஆண் அடிபடும் நேரம் இது. கத்தியைக் கீழே வீசி விட்டுச் சுவர் மூலையில் சரிந்து உடம்பு இறுக்கிக் கொண்டு நொச்சு நொச்சென்று உதை வாங்கும் நேரமிது.

அம்மா திரும்பத் திரும்ப ஒரேவிதமான சொல்லால் உதைத்தாள்.

'நீ போ!'

'நீ போ!'

'நீ போ!'

"நான் நாளைக்கு வரேன். தனியா வரேன். அப்போ பேசு."

முரளி எழுந்தான். உடுத்திக் கொண்டான். அப்பா படத்தை நமஸ்கரித்தான். அம்மாவைக் கிழக்கு பார்த்து நிற்கச் சொல்லி மனைவியோடு விழுந்து வணங்கினான். அம்மா பேசாமல் நின்றிருந்தாள்.

வாசல் வரை வந்தாள்.

"போயிட்டு வரேன் மாமி!" என்ற லலிதாவை அரை நொடிக்கும் குறைவாய் உற்றுப் பார்த்தாள்.

"நான் ஏதாவது தப்பாப் பேசியிருந்தால் மன்னிச்சுடு லலிதா" என்றாள். பளிச்சென்று நகர்ந்து உள்ளே போய்விட்டாள்.

லலிதா வீட்டுக்கு ஆட்டோவில் போகிற போது உயிர் எங்கேயோ கழன்று விழுந்து விட்டது போலிருந்தது.

லலிதா அரையடி நகர்ந்து அவனுக்கு அருகே நெருங்கி உட்கார்ந்து கொண்டாள். மெல்லத் தன் இடது கையால் அவன் வலது கையைப் பற்றினாள். எக்கிக் குனிந்து அவன் முகத்தைப் பார்த்தாள். முரளி பார்வையை எதிர்ப் பக்கம் திருப்பிக் கொண்டான். லலிதா அவன் புஜத்தை இறுக்கிக் கொண்டாள். தோளில் சாய்ந்தாள், நிமிர்ந்தாள், மெல்லக் கையை அவன் கழுத்தைச் சுற்றிப் போட்டாள். சின்னதாய் உலுக்கினாள். முரளி திரும்பினான்.

"எம்மேல் ஏதாவது தப்பு இருக்கா முரளி?"

'தெரியவில்லை' என்பதாய் முரளி உதடு பிதுக்கினான்.

"வீடுங்கறது கட்டடமா முரளி? மனுஷா தானே...."

முரளி மௌனமாய் இருந்தான்.

நாளைக்கு நான் மட்டும் தனியாகப் போய் அம்மாவைக் கூப்பிடட்டுமா?"

"வேண்டாம்."

"என் வீடு உங்களுக்குப் பிடிச்சிருக்கா முரளி."

பாலகுமாரன்



"இனி அந்த வீட்டில் ஒரு நிமிஷம் இருக்க முடியாது, அப்பா!"

"ஏம்மா?"

"நான் அடிச்சதுக்கு அந்த மாமியார் ராட்சஸி திருப்பி அடிச்சுட்டா!"

— நிழல் அ. கதிர்வேல்

வீடு என்பது கட்டடமா, மனிதர்களா? முரளிக்கு அந்தக் கட்டடம் பிடித்திருக்கிறது. காற்றோட்டமான மாடி வராந்தா, பெரிய ஹால், பதினாறு பன்னிரண்டுக்கு அறை. மூன்று பக்க ஜன்னல்கள். மொஸைக் தரை. குளியல் தொட்டி, பூவாய் விழும் வெந்நீர்க் குழாய். ஆளுயரக் கண்ணாடி, எல்லா இடங்களிலும் வெளிச்சம், வீடு பிடித்திருக்கிறது. ஆனால் மனிதர்கள்...? தெரியவில்லை.

"பெண் கல்யாணமாயிட்டா புருஷன் வீட்டுக்குப் போகணும்னு என்ன மரபு? இரண்டு பேர் ஒண்ணா, சந்தோஷமா வாழணும். அது எந்த இடமாக இருந்தால் என்ன... எந்தக் கட்டடமா இருந்தால் என்ன... ராமன் இருக்கிற இடமே அயோத்தி. ஜனகர் வீட்டுக்கு ராமன் வரக் கூடாதா? வந்துட்டா மிதிலே அயோத்தின்னு ஆகாதா....?" லலிதா நிதானமாய்க் கேள்வி கேட்டாள்.

"சந்தோஷம் முக்கியம். எது சந்தோஷம். எது சௌகர்யமோ அது சந்தோஷம். சௌகர்யம்னா என்ன.... காற்று வசதியா... தண்ணீர்க் கஷ்டமில்லாத, சத்தம் இரைச்சல் இல்லாத இடம் சௌகர்யம். நல்ல மனுஷர்கள் இருக்கிற இடம் சௌகர்யம். என் அப்பா, நல்லவர் முரளி."

"இருக்கலாம் லலிதா. அம்மாவுக்கு அங்கே வேறே ஏதோ கஷ்டம் இருக்கும்னு நினைக்கிறே."

"இல்லே, அவமானம்னு நினைக்கிறா. சம்பந்தி வீட்டில் கை நனைக்க மாட்டேன்னு ஒரு பிடிவாதம் பிடிக்கிறா."

"அதுக்கு ஏதாவது காரணம் இருக்கும் லலிதா."

"மரபு. மரபுதான் காரணம். சௌகர்யத்தை விட மரபு முக்கியம். சந்தோஷத்தை விட மரபு முக்கியம். மரபே சந்தோஷத்துக்கு ஏற்பட்டது. அது சிரமம்னா கஷ்டமாயிடுத்துன்னாகூட விடக் கூடாதுன்னு மரபு மேல் ஒரு பாசம், வெறி!" லலிதா பொருமலோடு பேசினாள்.

"மரபுங்கறது அல்பம் இல்லே. அது ஒரு பழக்கம். காலம் காலமாக மனுஷா மனசுல ஊறிப் போன பழக்கம். வலது கையில் சாதம் எடுத்துச் சாப்பிடற மாதிரி ஒரு பழக்கம். இடது கையால் அள்ளிப் போட்டுண்டா சோறு இறங்காதா..... விஷமாயிடுமா....? இருந்தாலும்...."

"தாராளமாய்ச் சாப்பிடலாம் முரளி. ஏன் சாப்பிடறதில்லே தெரியுமா? அடுத்தவன் சிரிப்பான். எல்லாரும் வலது கை உபயோகிக்கும்போது, சாப்பிட இடது கை உபயோகிச்சா சிரிப்பான். சாதம் விஷமாகாது. அந்தச் சிரிப்பு விஷமாகும். நெஞ்சுல குத்தி ரணமாகும். சீழ் கட்டும்."

"என்ன சொல்றே?"

"மரபுங்கறதே மத்த மனுஷா பேசறது. அடுத்த வீட்டுக்குப் பயந்து நடக்கறது. நம்ம சௌகர்யம்விட மத்தவா சிரிப்பு நமக்கு உறுத்தல். சம்பந்தி வீட்டோடு போயிட்டேளாமேன்னு யாராவது கேட்டால் உங்கம்மா பதில் சொல்லத் தயங்குவாள். அதான்..."

"ம்ம். அதுவும் முக்கியம்தானே?"

"ஊர் எல்லாத்துக்கும் சிரிக்கும். எல்லாத்தையும் பேசும். நம்ம உண்மையான கஷ்டம் தெரியாது. அதுக்குத் தெரிஞ்சுக்கவும் அவசியமில்லே."

"அம்மா அதை எதிர்த்துண்டு வர முடியுமா?"

"வந்தால் என்ன....?"

"நீ வாயேன்..."

"ஏன் வரணும்?"

"என் வீடு சின்னது. எட்டடுக்கு மாளிகையா. இல்லே."

"இருந்தாலும் வர மாட்டேன்."

"ஏன்?"

"வீடு கட்டடமா முரளி, மனுஷா..."

"என்ன சொல்றே?"

"உங்கம்மா வேறே, நான் வேறே. என் வீட்டில் நான் ராணி. நீங்க ராஜா."

"அப்ப.... எங்கம்மா....?"

"அவள் வீட்டில் இருக்கிறது நல்லது."

"எங்கம்மாவைப் பிடிக்கலே உனக்கு."

"இல்லே.... அப்படி இல்லே."

"வேறே?"

"அவள் உலகம், என் உலகம் வேறே வேறே. ஒத்து வராது. அவள் சாப்பாடு, என் சாப்பாடு, அவள் சங்கீதம் என் சங்கீதம், அவள் குணம் என் குணம் வேறே, வேறே..."

"அதனால்....?"

"விலகி இருக்கிறது நல்லது!"

"யாருக்கு?"

"உங்கம்மாவுக்கு, எனக்கு, உங்களுக்கு."

"அட்ஜஸ்ட் பண்ணிக்க மாட்டியா?"

"சரி.... எத்தனை நாள்? என்னிக்காவது ஒருநாள் வெடிச்சுப் பொறி பறக்கவா? அவளை நான் துன்புறுத்த விரும்பலே முரளி. உங்கம்மா நல்ல மனுஷி. அவள் என்னைத் துன்புறுத்தவும் விட மாட்டேன். சாணி தொட்டுச் சமையல் மேடை அலம்ப மாட்டேன். என் வரையில் அது முட்டாள்தனம். உங்கம்மாவுக்கு அதுலே சாஸ்திரம், மரபு....

எதுக்கு அடிச்சுக்கணும்? அவ, அவ வீட்டில் இருக்கட்டும். நான் என் இடத்தில் இருக்கேன்.''

''உன் இடம் எது லலிதா?''

''அயோத்தி. அதாவது நீங்க சந்தோஷமா இருக்கிற இடம். நீங்க எப்ப எங்க சந்தோஷமா இருக்க முடியும்? நான் சந்தோஷமா இருந்தாத்தானே....?''

உலகத்தின் எந்தப் பகுதியிலும் அயோத்தி என்கிற இடம் இல்லை என்று முரளிக்கு அன்று தெரிந்துவிட்டது.

நெஞ்சு கனத்தது.

ராமன் இருக்கும் இடம் அயோத்தி. இல்லை. ராமன் அயோத்தியில் இல்லை. அவன் தன் இளமைக் காலமெல்லாம் வனவாசத்தில் கழித்தான். காடு மலையெல்லாம் சுற்றினான். நதிகளைக் கடந்து நடந்து நடந்து போனான். நடுவே சீதையைத் தொலைத்து விட்டு அழுதான். யாருமற்ற அனாதையாய்த் தவித்தான். மரத்தோடு பேசினான். மானோடு பேசினான். புஷ்பங்களையும் புள்ளினங்களையும் வெறித்தான். இனிமையும், மரியாதையும் இதமுள்ள பேச்சும் உள்ள அந்த நல்ல மனிதன் வாழ்க்கையில் சொல்லொண்ணாத் துன்பங்களை அனுபவித்தான். ராமனுக்காவது லட்சுமணன் கடைசிவரை ஓர் ஆறுதலாய் இருந்தான். தனக்கு...? ராமன் கையில் தனுசு இருந்தது. உடம்பில் ராஜ குலத்து ரத்தம் இருந்தது. தனக்கு.....?

''ஏய்... என்ன.... இன்னும் அம்மா பத்தியே யோசனையா....?'' இரவு குளிர் காற்று வீசும்போது அவனை நெருக்கிக் கொண்டு லலிதா கேட்டாள். ''சொல்லுங்களேன், இன்னும் அம்மாதானா மனசுல...''

''இல்லை....''

''அப்புறம்...?''

''அயோத்தி பத்தி.... ராமன் பத்தி யோசனை....''

''அந்த யோசனையை அப்புறம் பண்றது.''

''இப்போ என்ன பண்ணணும்?''

''கிட்ட வாங்களேன்...'' லலிதா இழுத்தாள். முரளி இழுபட்டான்.

(தொடரும்)

## அருள்வாக்கு

மருந்தோடு பத்தியமும் முக்கியம். வித்யை என்கிற மருந்துக்கு அடக்கம், விநயம் என்கிற பத்தியம் அவசியம். இப்போது அந்தப் பத்தியம் இல்லாததால் மருந்தே விஷமாயிருக்கிறது. ஆனால் அடக்கத்தோடு பயின்றால் வித்யையே உண்மையில் ஞானம் தரும் அமிருதமாகும். அதனால் தான் ஞானமூர்த்திகளான தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி இரண்டு பேரையுமே வித்யா தேவதைகளாகவும் வைத்திருக்கிறார்கள். சரஸ்வதி சகலகலாவாணி, வித்யாஸ்வரூபிணி என்று எல்லோருமே அறிவீர்கள். 'சர்வ வித்யைகளுக்கும் பிரபு (ஈசானன்) என்றே வேதம் சதாசிவனை தக்ஷிணாமூர்த்தியைச் சொல்லுகிறது. பேச்சு, காரியம், அறிவது எல்லாம் அடங்கிப் போன நிலையிலிருக்கிற தக்ஷிணாமூர்த்தியே 'மேதா தக்ஷிணாமூர்த்தி' யாகி பெரிய புத்திப் பிரகாசம், வாக்கு வன்மை, காவிய சக்தி எல்லாம் தருகிறார். சரஸ்வதி, தக்ஷிணாமூர்த்தி இருவரும் அக்ஷமாலை, சுவடி இவற்றோடு சந்திர கலையைத் தலையில் தரித்திருக்கிறார்கள். அதற்குப் பேரே 'கலை.' கலை என்றால் எது வளருகிறதோ. அது. வித்யைக்கு முடிவு இல்லை. 'கற்றது கைமண்ணளவு; கல்லாதது உலகளவு' என்று சரஸ்வதியே விநயத்தோடு நினைக்கிறாளாம். இவள் தலையில் வைத்திருப்பது மூன்றாம் பிறை. அது பூரண சந்திரனாக வளர வேண்டும்.

சரஸ்வதிக்கும் தக்ஷிணாமூர்த்தியைப் போலவே நெற்றிக்கண் உண்டு. ஆசை பஸ்மமானாலொழிய ஞானமில்லை. அதற்காகத் தான் காமனை எரித்த நெற்றிக்கண் இவளிடமும் இருக்கிறது. இவ்விரண்டு தெய்வங்களுக்கும் ஜடா மகுடம் இருக்கிறது. அதுவும் ஞானிகளின் அடையாளம்.



இருவருமே வெள்ளை வெளேரென்று இருக்கிறார்கள். ஏழு வர்ணங்களில் சேராத வெள்ளை, பரம நிர்மலமான சுத்த ஸத்வ நிலையைக் குறிப்பது. இந்த வெள்ளையும் கூட, இன்னும் நிர்மலமாக, தன் வழியாக ஒளி ஊடுருவிச் செல்கிற அளவுக்குத் (Transparent) தெளிந்து விடுகிறபோது ஸ்படிகமாகிறது. தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி இருவருமே இப்படிப்பட்ட ஸ்படிகத்தினாலான அக்ஷமாலையைத்தான் வைத்திருக்கிறார்கள். வெள்ளை நிறம், சந்திர கலை, ஸ்படிகமாலை ஆகிய இவற்றை நினைத்தாலே நமக்கு ஒரு தூய்மை, தாப சாந்தி, அமைதி எல்லாம் உண்டாகின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# 'கல்கி'யைத் திருக்கிடச் செய்த 'வானதி'





ஒரு நூலை எழுதுவதென்பது ரொம்பக் கடினம் என்பதற்கு என் போன்ற எழுத்தாளர்களின் மேஜை அருகே உள்ள குப்பைத் தொட்டிகளே சாட்சி!

எழுதிய நூலை அச்சிட்டுப் புத்தக உருவில் கொண்டு வருவதென்பது அதைவிடக் கஷ்டம் என்பதற்கு என் போன்ற பல எழுத்தாளர்களின் பாங்கு பாஸ் புத்தகங்களே சாட்சி!

புத்தக உருவில் கொண்டு வந்துவிட்ட நூலை விற்பது என்பது ரொம்ப ரொம்ப சிரமம் என்பதற்கு என் போன்ற பல எழுத்தாளர்களின் வீடுகளில் அடுக்கி வைக்கப்படும் மக்கி மடிகின்ற புத்தகங்களே சாட்சி!

ஆனால் நமது திருநாவுக்கரசு இந்த மூன்று காரியங்களையுமே அனாயாசமாகச் செய்கிறார்!

அவர் ஒரு சிறந்த எழுத்தாளர். குறிப்பாகக் குழந்தைகளுக்கான கதைகள் பலவற்றை அவர் எழுதியுள்ளார். அவற்றில் நீதியும் நயமும் ஊடும் பாவும் போல் கண்ணுக்குத் தெரியாமல் அமையும். சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய வண்ணப்பட்டாடையாக அந்தக் கதைகள் மிளிரும். அவரது பதிப்புரைகளிலிருந்து பல பகுதிகளைத் தொகுத்தே ஒரு நூல் வெளியிட இன்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்பது அவரது எழுத்தாற்றலுக்கு மற்றும் ஒரு சான்று.

திருநாவுக்கரசு, மிக உயர்ந்த இலக்கியத் தரமான புத்தகங்களைப் பிரசுரிக்கிறார். சராசரி நாவல்களையும் வெளியிடுகிறார். ஆயிரம் பக்கங்கள் கொண்ட புத்தகம் முதல், மிக மெலிதான புத்தகங்கள் வரை வெளியிடுகிறார். எந்த நூலை எடுத்தாலும் நேர்த்தியாக இருக்கிறது. அச்சும், காகிதமும், பைண்டிங்கும், 'கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் என்பார்களே, அப்படி இருக்கிறது!' 'வானதி வேலை' என்றால் அச்சகத்தாரும் பைண்டர்களும் ஆர்வத்துடனும் பொறுப்புணர்வுடனும் ஒத்துழைப்புத் தருகிறார்கள்.

இவை இரண்டையும் விடச் சிறப்பு, குறிப்பிட வேண்டிய விஷயம், வானதி திருநாவுக்கரசு, புத்தகங்களை இன்றையச் சூழ்நிலையிலும் விற்பனை செய்து விடுகிறார் என்பதுதான்! இதற்கு, — ராஜாஜியின் ஒரு சொற்றொடரைப் பயன்படுத்துவதென்றால்— அசகாயசூரர்களின் திறமை வேண்டும்!

அது திருநாவுக்கரசுவிடம் இருக்கிறது!

இந்நாளில் புத்தகங்களை விற்பது எவ்வளவு கஷ்டம்! விலைவாசிகள் உயர்வால் புத்தகங்களின் விலையும் ரொம்ப அதிகரித்து விட்டது. வாசிக்க ஆர்வமுள்ளவர்களிடம் வாங்கப் பணமில்லை. பணம் படைத்தவர்களோ, ஆங்கில மோகம் கொண்டு, ஹெரால்ட் ராபின்ஸையோ அல்லது ராபர்ட் லுட்லுமையோ வாங்குகிறார்கள். அரசாங்கம் நூலகங்களுக்கு ஆர்டர் வழங்குவதென்பது கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக அறுநூறில் ஆரம்பித்து இன்று இருபது அல்லது முப்பது பிரதிகளில் வந்து நிற்கிறது. போதாக் குறைக்கு 'நாவல்




கள் வாங்க மாட்டோம்' என்ற அர்த்தமற்ற பிடிவாதம் வேறு! ஜெயகாந்தனுக்கும் மணி சேகரனுக்கும் ராஜராஜன் பரிசு வழங்கும் அரசு, 'நாவல்களை நூலகங்களுக்கு வாங்க மாட்டோம்' என்பது எவ்வளவு அபத்தம்! இந்தச் சூழலில், வானதி திருநாவுக்கரசு எப்படியோ சில்லறையாகவும் மொத்தமாகவும் நூல்களை விற்பனை செய்வது மட்டுமல்ல; நூலாசிரியர்களுக்கு ராயல்டி தொகையையும் ஒழுங்காகக் கணக்கு வைத்திருந்து தந்து விடுகிறார்! இன்னும் சொல்லப் போனால் சில நூலாசிரியர்களுக்கு அவர்கள் தேவைகளை முன்னிட்டு, புத்தகங்கள் அனைத்தும் விற்பனையாகு முன்னரே, மொத்த ராயல்டியையும் கணக்கிட்டுக் கொடுத்து விடுகிறார்! இதர பல பதிப்பகங்களுக்கு முன் மாதிரியாக விளங்குகிறார்.

எனவே இன்று மணிவிழாக் காணும் திருநாவுக்கரசு, வாசகர்கள்; எழுத்தாளர்கள்; பதிப்பகத்தினர்; அச்சக உரிமையாளர், ஊழியர்; பைண்டிங் தொழிலாளர்கள் முதலிய பல தரப்பினரது வாழ்த்துக்கும் பாராட்டுக்கும் ஆளாகியிருப்பதில் வியப்பில்லை.

திருநாவுக்கரசுக்கும் எனக்கும் கிட்டத்தட்ட நாற்பதாண்டுத் தொடர்பு உண்டு. அப்போது இளைஞரான திருநாவுக்கரசு, "ஜில்ஜில்" என்ற பெயருடைய குழந்தைகள் பத்திரிகை நடத்தி வந்தார். எனக்கு வயது பதிநாலு இருக்கலாம். ஒரு கதை எழுதி



"ஜில்ஜில்" பத்திரிகைக்கு அனுப்பினேன். எடுத்த எடுப்பிலேயே பெரிய கதை! இரண்டு மூன்று இதழ்களுக்கு வரக்கூடிய அளவில் நீண்ட கதை. நான் 'கல்கி' அவர்களின் மகன் என்பதைத் தெரிவிக்க எனக்கு விருப்பம் இல்லை. 'கல்கி'யின் மகன் என்பதால் எனக்குச் சலுகை காட்டப்படக் கூடாது என்ற பெருந்தன்மை அதற்குக் காரணம் அல்ல! கதை திருப்பி அனுப்பப்படுமானால், 'கல்கி'யின் மகனா இவ்வளவு மோசமான கதை எழுதியிருக்கிறான்?' என்று கேலிக்கு இடமாகி விடுமே என்ற தற்காப்பு உணர்வு தான் காரணம்! என் அதிர்ஷ்டம், ஆசிரியர் திருநாவுக்கரசுக்கு என் கதை பிடித்துப் போய்விட்டது! அதைப் பிரசுரித்தது மட்டுமல்ல, நான் புனைபெயரில் எழுதியிருந்த போதிலும் விலாசத்தை வைத்து நான் கல்கியின் மகன் என்பதைத் தெரிந்து



கொண்டு, முன்னுரையாக ஓர் ஆசிரியர் குறிப்பு எழுதியிருந்தார். "மீன் குட்டிக்கு நீந்தக் கற்றுத்தர வேண்டுமா?" என்று ஆரம்பமாயிற்று அந்த ஆசிரியர் குறிப்பு! அந்த இதழ் கதைப் பகுதியின் முடிவில் 'தொடரும்' போட்டிருந்தார்.

அத்துடன் விட்டாரா? அந்த இதழின் இரு பிரதிகளை எடுத்துக் கொண்டு என் தந்தையாரிடத்தில் நேரில் வந்துவிட்டார்! "உங்க மகனின் கதையைப் போட்டிருக்கேன் பாருங்கள்" என்று பெருமையாகச் சொன்னார்.

எனக்கோ ஒரே நடுக்கம்! காரணம், நான் அப்பாவுக்குத் தெரியாமல் அந்தக் கதையை எழுதி அனுப்பியிருந்தேன். தெரிந்தால் கேலி செய்வாரோ, அல்லது கோபிப்பாரோ என்று புரியாத குழப்பத்தில் இருந்தேன்.

திருநாவுக்கரசு போன பிறகு, குற்றம் புரிந்துவிட்டு ஹெட்மாஸ்டர் அளிக்கப் போகும் தண்டனையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் மாணவன் நிலையில் நான் இருந்தேன். அப்பா என்னை அழைத்து, "இதை நீதான் எழுதினையா?" என்று கேட்டார் சந்தேகமாக. "ஆமாம்" என்றேன். இப்படியும் அப்படியும் பக்கங்களைப் புரட்டினர். இங்கு நாலு வரி, அங்கு நாலு வரி படித்தார். பிறகு, "நன்ருக எழுதியிருக்கிருய்; ஆனல் மறுபடி எழுதாதே! படித்துப் பரீட்சையில் பாஸ் பண்ணுகிற வழியைப் பார்!" என்ருர்.

கல்வியில் கவனம் செலுத்த வேண்டிய பருவம் அது என்பதையும் எழுத ஆரம்பிக்கும் முன் அனுபவங்களை நிறைய அடைய வேண்டும் என்பதையும் உணர்த்த அவர் அவ்வாறு கூறியிருக்கலாம்.

ஆனல் திருநாவுக்கரசு என்னை விட்டாரில்லை! 'எழுதாவிட்டால் என்ன? பேட்டி தரலாமே!' என்று கருதினரோ என்னவோ, மறுபடி ஒரு நாள் வீடு தேடி வந்துவிட்டார்!

கல்கி அவர்களை நெருங்கி, "பேட்டி ஒன்று...." என்று ஆரம்பித்தார்.

"இப்போ தீபாவளி மலர் வேலைகள் அதிகம்; கொஞ்ச நாள் போகட்டும்; அப்புறம் பார்க்கலாம்" என்று அப்பா தட்டிக் கழித்தார்.

"உங்களை இல்லே; உங்கள் மகனைத்தான் பேட்டிகாண அனுமதிகேட்கிறேன்" என்ருர் திருநாவுக்கரசு.

கல்கி, திடுக்கிட்டு நிமிர்ந்தார்! கல்கி அவர்களையே சில கணங்களுக்குப் பிரமிக்கச் செய்துவிட்ட ஒரே மனிதர் திருநாவுக்கரசுதான்!

சமாளித்துக் கொண்டு, "அவனை என்ன பேட்டி காண இருக்கிறது?" என்ருர் கல்கி.

"அழகுதான்! ஒரு பெரிய எழுத்தாளரின் மகனுயிற்றே! என் பத்திரிகை வாசகர்களான சிறுவர் சிறுமியர் அவனைப் பற்றி அறிய ஆர்வமாய் இருப்பார்கள்" என்ருர் திருநாவுக்கரசு.

"சரி" என்ருர் அப்பா.

"கிளம்பு" என்ருர் திருநாவுக்கரசு என்னைப் பார்த்து.

"அவனை எங்கே கிளம்பச் சொல்கிறீர்கள்?" என்று அப்பா மறுபடியும் திடுக்கிட்டுக் கேட்டார்.

"நாங்க, பார்க், பீச்சுன்னு எங்கேயாவது உலாத்திக்கிட்டுப் பேசுவோம். உங்க நிழல்ல இருந்துக்கிட்டுத் தம்பி எப்படி மனம் திறந்து பேசும்?" என்று ஒரு போடு போட்டார் திருநாவுக்கரசு.

அப்பா அவரை ஒருதரம் முறைத்துப் பார்த்தார். திருநாவுக்கரசு கலங்காமல் இருந்தார். "சரி, அழைச்சுட்டுப் போ," என்று அப்பா சிரித்தபடியே அனுமதி அளித்தார்.

அன்று திருநாவுக்கரசு கேட்ட கேள்விகள், நான் சொன்ன பதில்கள் எதுவும் எனக்கு நினைவில்லை. ஆனல் அவர் ஹோட்டலில் இனிப்பு வாங்கித் தந்ததும் அவர் செலவில் நான் ஐஸ்கிரீம் சாப்பிட்டதும் நன்ருக நினைவிருக்கின்றன!

திருநாவுக்கரசுக்குக் கல்கியிடம் உள்ள அன்பு, பக்திக்கு நிகரானது. அவர் புத்தகம் பிரசுரிக்க ஆரம்பித்தபோது, முதல் நாலு புத்தகங்களுக்குக் கல்கி அவர்கள், தாமே தம் கைப்பட எழுதிய விமர்சனம் காரணமாக வந்து குவிந்த மணி ஆர்டர்கள் தான் அஸ்திவாரமாக அமைந்து தம்மை இந்த அளவுக்கு உயர்த்தியது என்று அவர் உறுதியாக நம்புகிருர். அது காரணமாகத்தான் தமது பதிப்பகத்துக்கு "வானதி பதிப்பகம்" என்று பெயரும் சூட்டினர். 'பொன்னியின் செல்வன்' சரித்திரக் கதையின் கதாநாயகி வானதி. ராஜ ராஜனை மணந்து ராஜேந்திரனைப் பெற்றெடுத்த மாதரசி. இன்று திருநாவுக்கரசு, "வானதி திருநாவுக்கரசு" என்றே அழைக்கப்படுகிருர். அந்த அளவுக்கு 'வானதி' என்ற பெயர் அவருடன் ஒன்றிவிட்டது. அவரது வீட்டிலும் காரியாலயத்திலும் 'கல்கி' அவர்களின் படத்துக்குப் பூஜைப் படத்துக்கு உரிய மதிப்பும் மரியாதையும் உண்டு. அதைவிட முக்கியமாகத் திருநாவுக்கரசின் இதயத்தில் 'கல்கி'க்கு நிரந்தரமான, பிரதானமான இடமுண்டு.

இவ்வளவு ஈடுபாடு 'கல்கி'யிடம் இருந்தாலும் அவரது நூல்களைப் பிரசுரிக்கும் வாய்ப்புக் கிட்டாமல் இருக்கிறதே என்ற தாபம் நெடு நாட்களாகத் திருநாவுக்கரசுக்கு இருந்து வந்தது. இறையருளால் அந்த ஏக்கமும் அண்மைக் காலத்தில் நீங்கியது.

ஒருவரிடம் கைகட்டி வேலை பார்ப்பது சுலபம். பெரியவர்கள் உருவாக்கி வைத்த ஒரு தொழிலைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு போவதும் ஓரளவு எளிதானது தான். அதைவிட இலகுவான காரியம் ஒன்று உண்டென்ருல் அது பெரியவர்கள் விட்டுச் சென்ற தொழிலுக்கு மூடு விழா நடத்துவது!

ஆனல், ஒன்றுமில்லாத நிலையிலிருந்து, எவ்வித முன் அனுபவமும் இல்லாமல் ஒரு துறையில் புகுந்து, முதலிடத்தை எட்டிப் பிடிப்பது என்பது மிக அரிதான, மிகக் கடினமான காரியம். இத்தகையவர்களைத் தான் நாடு போற்ற வேண்டும். ஏனென்ருல் இவர்கள்தான் புதிய வேலை வாய்ப்புக்களை உருவாக்குகிருர்கள், செல்வத்தைப் பெருக்குகிருர்கள், தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்துக்கு உதவுகிருர்கள்.

அத்தகைய ஒருவர் வானதி திருநாவுக்கரசு. அவரது வாழ்க்கை, பல பேருக்கு எடுத்துக்காட்டாக அமைந்து நாடு வளம் பெற உதவும்.

— கி. ராஜேந்திரன்

(வானதி திருநாவுக்கரசுவின் மணிவிழா 20.8.87 அன்று சென்னை ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் மாலை ஐந்து மணி முதல் நடைபெறும்.)

# திமிசுகாபு அழைப்பிதழ்

திமிசுகாபு நற்பணி மன்றத்தினருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. நாடக நடிகர் சூரப்பாவைப் பாராட்டி விழா நடத்த அவர்கள் முயன்று கொண்டிருந்தனர். சூரப்பா தேதி கொடுத்துக் கடிதம் எழுதியிருந்தார்.

சிறப்பான முறையில் எப்படிப் பாராட்டு விழா நடத்துவது என்று மன்றம் கூடிப் பேசியது.




தலைவர் திலகமூர்த்தி எழுந்தார். "நண்பர்களே.... சூரப்பா சாதாரண நடிகர் அல்ல. பழம் பெரும் புதுமை நடிகர்.... அவர் இந்த ஊருக்கு வருகிறார் என்றால், அவருக்குப் புகழ் இல்லை... இத்தனை பெரிய மனிதரை அழைத்து வந்தவர் யார் என்று நம்மைத் தான் விசாரிப்பார்கள்.... எனவே, அவர் வருகையைப் பிரபலமாய் விளம்பரப்படுத்துவது என் பொறுப்பு...." என்று ஆவேசமாய்ப் பேசிவிட்டு உட்கார்ந்தார்.

"சூரப்பா ஒவ்வொரு நாடகத்திலும் எப்படியாவது ஒரே ஒரு பாட்டு வரும்படிச் செய்வாராமே.... அந்தப் பாட்டு...." மெல்ல இழுத்தார் மில்டன் பாபு.

"அந்தப் பாட்டா? மறக்க முடியுமா? நான் சொல்லறேன்....

'மிளகாய் பஜ்ஜி வேணும்
இளம் வறுவலாய் வறுத்த
நறுமணம் கமழும்
மிளகாய் பஜ்ஜி வேணும்.'

அந்தப் பாட்டுத்தானே...." என்று ஞாபக மூட்டினார் திலகமூர்த்தி.

"எஸ்... மத்யானம் டிபன் மிளகாய் பஜ்ஜி சேமியா கிச்சடி.... எப்படி?" என்றார் மில்டன்.



சோகச் சென்னையின்
தாகம் தீர்த்திட
யாகம் செய்தோம்
ராகம் பாடினோம்
மேகம் கூடவில்லை.

கருணை இல்லாத
வருண பகவானே
மெத்தனம் போதும்
எத்தனை தந்தால்
இத்தரை நனையும்?

— எஸ். வாணிசங்கர்

"வெரிகுட்.... இந்தப் பொன்னாடை போர்த்தறது.... ஒலிப்பெருக்கி, லைட்.... இதெல்லாம் நான் ஏத்துக்கறேன்..." என்று சுப்பிரமணியன் சொன்னார்.

"அவரை ரிசீவ் பண்றது, செண்ட் ஆஃப் பண்றது.... இதுங்க ரெண்டும், காதரும் புண்யகோடியும் ஏத்துக்கட்டும்...." திலக மூர்த்தி தெளிவாய்ச் சொன்னார்.

"ஓகே... பத்திரிகை எப்படி அடிக்கணும்?"

"அதுதானே முதுகெலும்பு.... பர்ஸ்ட் கிளாஸ் பேப்பரிலே.... கொட்டை எழுத்திலே 'திமிசுகாபு பாராட்டு விழா'ன்னு அடிச்சு.... நாள், இடம் எல்லாம் தெளிவாப் போடணும்..."

"ம்... அப்புறம்...."

"விழாத் தலைவர்னு என் பெயர்..."

"வரவேற்புரையிலே என் பெயர்..."

தலைவரும் செயலரும் முறையே கூவினர்.

"பாராட்டுவோரில்என் பெயர்... அது மட்டும் இல்லே.... பொன்னாடை போர்த்துபவரும் நான்தான்...."

"ம்... சொல்லுங்க, எங்க பேரு வர்ற சான்ஸே இல்லையா?" பரிதாபமாய்க் கேட்டார் காதர்.

"அது எப்படி.... ம்.... நன்றியுரைன்னு உன் பேர் போட்டுடுவோம்.... எப்படி ஐடியா...." தலைவர் கேட்டார்.

"அப்ப எம்பேருதான் அம்போவா?" என்று அழாதகுறையாகக் கேட்டார் புண்ய கோடி.

"ம்... ம்.... ஒரு ஐடியா. அறிக்கை வாசித்தல்னு உன் பேரு போட்டுடறது...." என்றார் தலைவர்.

"எந்த அறிக்கை வாசிக்கிறது?"

"ஹூம்... நாம் என்ன அறிக்கை வாசித்து ஆடியன்ஸை அறுக்கவா கூட்டம் போடறோம்? அறிக்கை வாசித்தல் என்றதும், நீ மேடைக்கு வந்து, அங்கே உட்கார்ந்திருக்கிற என்னை அடையாளம் காட்டி, 'இவர்தான் திலகமூர்த்தி, இவரோட முதல் எழுத்தையும், இவர்தான் மில்டன் பாபு, இவரோட முதலெழுத்தையும், இவர்தான் சுப்பிரமணியன், இவரோட முதலெழுத்து... இவர் காதர் மைதீன், இவரோட முதலெழுத்தையும், நான்தான் புண்ய கோடி, என் பேரின் முதலெழுத்தையும் இணைத்து உருவாக்கியதுதான் 'திமிசுகாபு' நற்பணி மன்றம்னு ஒரு போடு போடு...." பெருமையாகச் சொன்னார் மில்டன் பாபு.

"சரி... நோட்டீஸ் அடிக்கிறதிலேதான் ரொம்ப கவனம் வேணும்.... விழாவுக்கு இன்னும் நாலே நாட்கள்தான் இருக்கு. நம்ம யார் பேருமே விடாமே பார்த்துக்க.... புரூப் பார்க்கக் கூட நேரமில்லே...." என்றார் திலகமூர்த்தி.

சூரப்பாவின் வரவுக்காகக் கிராமமே விழாக்கோலம் பூண்டிருந்தது.

காதர் மைதீனும், புண்ய கோடியும் டாக்சி எடுத்துக் கொண்டு பக்கத்து ஊர் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றனர். சூரப்பா எக்ஸ்பிரஸில் வரவில்லை.

நேரம் ஊர்ந்தது.

"என்னடா இன்னும் காணோம்...." மெல்லக் கேட்டார் திலகமூர்த்தி.

"அதுதான் எனக்கும் புரியலே.... சுளையா இருநூறு ரூபா குடுத்துட்டு வந்தோமே... ம்... உடம்பு கிடம்பு சரியில்லாமே போயிருக்குமோ?" தன் சந்தேகத்தைச் சொன்னார் மில்டன் பாபு!

தந்தி ஆபீஸ் சுவாமிநாதன் கையில் சிவப்புத் தந்திப் பேப்பருடன் வந்து கொண்டிருந்தார்.

"அதோ, சுவாமிநாதன் வர்றார்...."

ஆவலோடு பார்த்தனர்.

"சார் தந்தி...."

கையெழுத்திட்டு வாங்கி, படபடப்புடன் பார்த்தார் மில்டன் பாபு.

"முறையாக அழைப்புகூட அச்சடிக்கத் தெரியாத உங்கள் பாராட்டு விழாவில் பங்கு பெறுவதை நான் அவமானமாகக் கருதுகிறேன். அதனால் வரவில்லை. பணத்தை எம்.ஓ. செய்துள்ளேன். — சூரப்பா" படித்தார் மில்டன் பாபு.

"என்னடாது... அழைப்பிதழ்லே ஏதாவது எழுத்து மிஸ்டேக்கா... ஒரு நோட்டீஸ் எடு பார்க்கலாம்..."

நோட்டீஸை பையிலிருந்து எடுத்துத் தந்தார் திலகமூர்த்தி.

திமிசுகாபு சார்பில்
பாராட்டு விழா.
இடம்: வெக்காளி அம்மன் திடல், சூரையூர்
நாள்: 30.10.86 மாலை 6 மணி
தலைவர்: திலகமூர்த்தி; வரவேற்புரை: மில்டன் பாபு; அறிக்கை வாசித்தல்: புண்ய கோடி; பொன்னாடை போர்த்தல் சுப்பிரமணியன்; நன்றியுரை: காதர் மைதீன்...
அனைவரும் வருக....!

"ஆமா.... கடைசியிலே சூரப்பா பேரை விட்டுட்டோம்... அதான் வரலே.... இப்போ என்ன பண்றது?" என்று மூவரும் மயங்கி விழுந்தனர்.

சாருஹாஸன் அலசுகிறார்:

# சினிமா: மோகமும் சோகமும்!



"ஒரு கணவன் மனைவியிடையேயான உறவை மிகவும் நயமாக எடுத்துச் சொல்லும் திரைப்படம் மகேந்திரனின் 'உதிரிப் பூக்கள்.' அதிலே ஃப்ரேமுக்குப் ஃப்ரேம் யதார்த்தம், கலையம்சம் என்று உயர்வான விஷயங்கள் இருந்தன. சென்னையில் இருபத்தைந்து வாரங்கள் ஓடித் தயாரிப்பாளருக்கும் விநியோகஸ்தர்களுக்கும் லாபம் சம்பாதித்துத் தந்த திரைப்படம் இது. அதே படம் எனது சொந்த ஊரான பரமக்குடியின் டூரிங்டாக்கீஸில் எண்ணி மூன்றே நாட்கள் ஓடியது. ஆறே காட்சிகளோடு அல்பாயுசில் அதன் கதை முடிந்து விட்டது!

"படத் தயாரிப்பில் எவ்வளவு அபாயம் இருக்கிறது என்பதையே இச்சம்பவம் உணர்த்துகிறது. ஒரு படம் நிச்சயமாக வெற்றி பெறுமா என்பதை முன்கூட்டியே சொல்ல முடியாது. இதனால் தயாரிப்பாளர்கள் முன்னெச்சரிக்கையாக எல்லாப் பொழுதுபோக்கு அம்சங்களையும் புகுத்திப் படத்தின் வெற்றியை உறுதிப்படுத்த முயற்சி செய்கிறார்கள்.

"ஆனால் சினிமா பார்ப்பதில் செலவிடப்படும் மனித உழைப்பு நேரத்தைக் கணக்கிட்டால், வெறும் மிகைப்படுத்தப்பட்ட கற்பனைக் காட்சிகளைப் பார்ப்பதில்தான் அவை உபயோகமின்றிக் கழிகின்றன என்பது புரியும்.

"இந்தியாவிலேயே அதிகத் திரைப்பட அரங்கங்கள் இருக்கும் மாநிலம் தமிழ்நாடு தான். சுமார் மூவாயிரம் அரங்கங்கள். இவற்றில் ஒவ்வொரு நாளும் எல்லாக் காட்சிகளுமாகச் சேர்த்து சுமார் நாற்பது லட்சம் பேர் சினிமா பார்க்கிறார்கள். ஒரு மாதத்தில் சுமார் பன்னிரண்டு கோடி பேர் சினிமா பார்க்கிறார்கள். தமிழகத்தின் மொத்த ஜனத் தொகை ஐந்து கோடிதான்! இந்த ஐந்து கோடி பேரும் ஒரு மாதத்தில் தலா சுமார் ஏழு மணி நேரம் சினிமா பார்ப்பதில் கழிக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு என்ன உபயோகம்? விலை மதிக்க முடியாத மனித உழைப்பு நேரத்தைப் பெற்றுக் கொள்ளும் சினிமா உலகம் சமூகத்துக்கு என்ன செய்கிறது?

"இந்தக் கேள்விக்கு நெஞ்சு நிமிர்த்திப் பதில் சொல்ல முடியாமல் இருப்பதுதான் இன்றைய சினிமாவின் மிகப் பெரிய குறை. பொழுதுபோக்கு அம்சமுள்ள சினிமாக்கள் கூடாது என்று நான் கூறவில்லை. அந்தப் பொழுதுபோக்கினூடேயே மக்களின் மன மேம்பாட்டுக்கு வழிவகுக்க முடியும். அதில் தவறி விடுகிறோம் என்பதுதான் குறை. மேலும் மேற்கு வங்கம், கேரளம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் ஏதேனும் ஓர் உயர் நோக்கத்தை உள்ளடக்கிய படங்கள் அடிக்கடி வெளியாகின்றன. தமிழகத்தில் இத்தகைய படங்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவாக இருக்கிறது.

"சினிமாத் துறை பல பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கிறதே என்று வாதிடலாம். ஆனால், அதன் மூலம் கெட்டலையும் இளம் மனங்களின் எண்ணிக்கை, அதன் மூலம் பொருளாதார ரீதியில் பலன் பெறும் நபர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் பன்மடங்கு அதிகம்.

"மேலும் திரைப் படத் தொழிலில் புரளும் பணத்தின் பின்னணியில் பல கதைகள் இருக்கின்றன. அரசியலைப் போலவே திரைப் படத் துறையிலும் கறுப்புப் பணம் நிறைய விளையாடுகிறது என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் இது சில 'பெரிய' தயாரிப்பாளர்களிடம் மட்டும்தான். அவர்களும் தங்கள் பணத்தில் மிகக் குறியாகவும் கவனமாகவும் இருப்பார்கள். ஆனால் புதிதாகத்

தயாரிப்பில் இறங்கும் சில இளைஞர்களின் கதையே வேறு.

“கிராமங்களிலும் புறநகர்ப் பகுதிகளிலும் வியாபாரம், விவசாயம் என்று சொந்தத்தில் தொழில் செய்து ஓரளவு வசதியை அடைந்துள்ளவர்கள் இரண்டு மூன்று லட்சங்கள் கையில் சேர்ந்ததும் ‘சினிமாவில் இறங்கினால் என்ன?’ என்று யோசிப்பார்கள். அவர்கள் ஆசைக்குத் தூபம் போட்டு வளர்க்கவே சில ஆசாமிகளும் வந்து சேர்வார்கள். தூபம் போடுபவருக்கும் எளிதில் பணம் கிடைக்கிறதே! கையில் இருக்கும் பணத்தோடு, சொத்துக்களை விற்றுச் சேர்த்த பணத்தையும் எடுத்துக் கொண்டு சென்னைக்குப் படையெடுக்கிறார்கள் இவர்கள். இங்கே வந்ததும்தான் தெரிகிறது மூன்று நான்கு லட்சங்களில் ஒரு படத்தை எடுத்துவிட முடியாது என்று. முன் வைத்த காலைப் பின் வைக்க மனமின்றி சினிமாவுக்கு ஃபைனான்ஸ் செய்வதையே தொழிலாகக் கொண்ட பண முதலைகளை அணுகுகிறார்கள். மிச்சம் மீதி உள்ள சொத்துக்களையும் அடமானம் வைத்து எழுபது சதவிகித வட்டிக்குக்கூட ஒப்புக் கொண்டு, கடன் வாங்குகிறார்கள். ஆழம் தெரியாமல் காலை விட்ட பிறகு படத்தை முடிக்க முடியாமல் திண்டாடுவார்கள். வீணான சினிமா ஆசையால் இப்படிக் கையைச் சுட்டுக் கொள்பவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள்.

“**இ**தில் மிகவும் வேடிக்கை என்னவென்றால், பணத்தை இழந்துவிட்டு ஊர் திரும்புவோர் மீண்டும் பழைய வியாபாரத்தில் ஈடுபட்டு லாபம் சம்பாதித்துக் கடனை அடைத்துவிட்டு, உபரி பணத்துடன் மீண்டும் சினிமா எடுக்க வருவதுதான்!

“தமிழ்நாட்டில் தினமும், சுமார், நூறு சினிமா யூனிட்டுகள் செயல்படுகின்றன. ஒவ்வொன்றிலும் லைட் பாய் முதல் அசோசியேட் டைரக்டர்வரை சுமார் எண்பது பேர் வேலை செய்கிறார்கள். இந்த எட்டாயிரம் பேருக்கும் மாதாமாதம் சில கோடி ரூபாய்கள் ஊதியம் தரப்படுகிறது. இந்தச் சில கோடிகளில் பெரும் பகுதி வெற்றிப் படத் தயாரிப்பாளர்களின் பணம் அல்ல — வெற்றிக் கனவுகளோடு வருகிற அரைகுறைத் தயாரிப்பாளர்கள் தங்கள் சொத்து சுகத்தை விற்றும், ஏராளமான வட்டிக்குக் கடன் வாங்கியும் முதலீடு செய்துள்ள பணம்தான்!

“இந்தப் பரிதாபத்துக்குரிய சினிமா ஆசை படைத்தவர்கள்தான் இண்டஸ்ட்ரியில் உள்ள தொழிலாளர்களை வாழ வைத்துக் கொண்டிருக்கிறார்கள்! அவர்களுக்கு என் பரிதாபம் கலந்த வாழ்த்துக்கள்.”

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

புகைப்படம்: **சுபா**

# மிஸ்டர் இந்தியா

- அமுல் பேபி கன்னத்துடன் வளையவரும் ஹீரோ, குட் — செலக்ஷன்.
- தனக்கே உரித்தான பிரத்தியேக நெளிவு சுளிவுகளுடன் ஸ்ரீதேவி — சிக்தேவி!
- வில்லன் முகம்போ நடப்பதும், நிற்பதும், சீறுவதும் — ரசிக்கப்பட வேண்டியவை!
- காமிராக்காரர் செலக்ட் பண்ணும் கோணங்கள், லைட்டிங் அரேன்ஜ்மென்ட்கள் — நெருடல்கள்.
- கதை காமிக்ஸ் கதைதான். அதை உருவாக்கியிருக்கும் விதம் டாப்!
- மாயமாக மறையும் மிஸ்டர் இந்தியா, டெலிபோன் பேசுவது, கருட்டுப் பிடிப்பது நல்ல கலகல.
- ஆஞ்சநேயர் பறந்து பறந்து துஷ்டநிக்ரஹம் செய்வது — டிட்டோ!
- குழந்தைகள் பசியால் தவிக்கும் காட்சியில் பார்ப்பவர் கண்களில் கண்ணீர்.
- வெடிகுண்டு விபத்தில் அந்த சார்மிங் டார்லிங் இறந்து போவது... மேற்படி!
- ராங் நம்பர் டெலிபோன்காரர் படும் அவதி — வாய் நிறையச் சிரிப்பு.
- விஞ்ஞானியின் கண்டுபிடிப்பு கஷ்டமே படாமல் நாயகனுக்குக் கிடைக்கிறதே. அந்த லீன் 'சப்.'
- நீண்ட நாட்கள் கழித்து ஹிந்திப் படத்தில் கூட முணுமுணுக்கும்படி பாடல்கள்.
- இரத்த அழுத்த வில்லன், முஸோலினி ஹிட்லர் டைப் வில்லன் — டைரக்டரின் கற்பனை வளத்தைக் காட்டுகின்றன.
- முதல் பாதி படம் சென்டிமென்ட், கிளுகிளு என்று மாறி மாறித் தாவிக் கதையையே தொட மாட்டேன் என்கிறது.
- ஸ்ரீதேவி ஆடும் அந்த விரகபாவ காதல் டூயட் இனிமை — இளமை!
- மிஸ்டர் இந்தியாவிற்குச் சண்டைக் காட்சிகள் போதுமான அளவு இல்லாதது குறையாக இல்லை.
- வில்லனின் கோட்டையும் கோட்டையைச் சார்ந்த இடங்களும் — அடேயப்பா எவ்வளவு செலவாகி இருக்கும்!
- ஸ்ரீதேவியின் சார்லி சாப்ளின் கூத்து, சார்லி சமலே நெருங்க முடியாவிட்டாலும் — ஹி ஹி ஹி!
- குழந்தைகளுடன், பெரியவர்களும் சேர்ந்து ஹாய்யாகப் பொழுது போக்க ஒரு படம்.

— ஜெயமன்மதன்



# உறவு; மனம்; ஈரம்.

* 'உறவு' — சிறுகதையில் தாய்மைக்காக ஏங்கும் பெண்ணின் மென்மையான உணர்ச்சிகள் வரிக்கு வரி சொல்லப்பட்ட விதமும்; தாய்மைதான் என ஊர்ஜிதப்பட்ட பின் அந்தத் தாயின் சந்தோஷக் களிப்பும்; 'மலடி' என்ற பட்டம் நீங்கிய மனநிறைவில் அவள் காணும் சுகமும்...
அப்பப்பா! நெகிழ வைத்த விஷயங்கள்!
முடிவு... — இதயத்தைக் கனக்க வைத்துவிட்டது!

கணபதி, கோவை. இல. ராஜகோபால்.

* பாசத்தின் தவிப்புகளைத் தத்ரூபமாகத் தந்திருந்த 'மனம்' சிறுகதை அருமையாக இருந்தது.

திண்டுக்கல், எஸ். பி. தியாகராஜன்.

* ஒரு தாயின் தாகம் ஒருவனின் இமைகளை ஈரமாக்கி, இன்னொருவனுக்கு உதவ முன்வந்த 'மனிதாபிமானம்' ஐயனின் படைப்பில் தங்கமாக மிளிர்கிறது.

ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

* வடாற்காடு மாவட்ட கலெக்டர் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் மலைபோல் குவிந்து கிடப்பது பேட்டியில் தெளிவாகிறது. அனைத்து குறைகளும் தீர்க்கப்பட வேண்டுமானால் கலெக்டர் பேட்டி இடம் பெற்ற இக்கல்கி இதழை அவர் எப்போதும் கையில் வைத்திருக்க வேண்டியது அவசியம்.

திருநெல்லிக்காவல், எஸ். அரிஅரன்.

* ஜால்ரா ஜனநாயகம் என்று தலைப்பிட்ட தலை [illegible] படித்தேன். பிரதமருக்கு ஜால்ரா போடாத [illegible] அது இருந்தது குறித்து மகிழ்ச்சி. ராஜீவின் அவசர அரசியல் நடவடிக்கை நாட்டின் ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிப்பதாக உள்ளது.
இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லதரசு — என்ற திருக்குறளுக்குப் புறம்பாகச் செயல்படும் ராஜீவ் இன்னொன்றையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.
பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும். — பிரதமரைச் சுற்றியுள்ள அமைச்சர்களின் ஆலோசனைகள் அவரைத் தவறான பாதைக்கு அழைத்துச் செல்கின்றன.

காட்டுக்காளூர் வி. வெங்கடேச பாரதி.

* வளமான வடாற்காடு விஷமாகிறது கட்டுரை படித்தேன். தோல் பதனிடுவதில் இந்தியாவிற்கு ஆண்டுக்கு நூறு கோடி கிடைக்கும். போதும், உலகத்திலேயே தோல் பதனிடுவதில் சிறப்பிடம் வகிக்கும் பெருமையும் சந்தோஷப்படும் அரசு, அதனால் மக்களுக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைப் புரிந்து கொள்ளாதது ஏன்? மக்களுக்கு ஆவன செய்தால் அது நம் நாட்டுக்கே பெருமையல்லவா!

மயிலாடுதுறை — 3, சிலப்பதிகாரன்.

* 'வளமான வடாற்காடு விஷமாகிறது' கவர் ஸ்டோரி படித்தேன். ட்ரீட்மெண்ட் பிளாண்ட் பற்றி 'கலில்' தமிழ்நாடு நிறுவனம் சில தயாரித்த விளக்கப் படம் சமீபத்தில் பார்த்தேன். அருமையாக விளக்கம் (மட்டும்) அளித்திருந்தார்கள். ஆனால் அவை எல்லாம் வெறும் கதைதான் என்பது தமிழ்நாடு அரசுக்குச் சொந்தமான 'தமிழ்நாடு கெமிக்கல்ஸ் அண்டு குரோமேட்ஸ் லிமிடெட்' — ஏ அதைச் சரியாகப் பின்பற்றவில்லை என்பதைக் கட்டுரையில் படித்ததன் மூலம் அறிந்து மனம் மிக வேதனை அடைந்தது.

மயிலாடுதுறை, கி. எழில்.

* ஜெகதாஸ், தமது உண்ணாவிரதத்தை வாபஸ் பெற்றதற்கான காரணத்தை மக்களிடம் சொல்லாததால், அது வெறும் 'ஸ்டண்ட்' போலாகி விட்டது எனத் தராசு கூறியிருப்பதைப் படித்து ஆச்சரியமடைந்தேன். வேறொரு வாரப் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் "ஜெப்பியார் என்னிடம் கூறிய மூன்று காரணங்கள் திருப்தியாக இருந்தன. என்றாலும், தண்ணீர்ப் பஞ்சம் தொடர்ந்து இருக்குமேயானால், சில மாதம் கழித்து மீண்டும் (நவம்பர் மாதம் ஆறாம் தேதி) உண்ணாவிரதம் இருப்பேன்!" என்று ஜெகதாஸ் கூறி இருந்ததைத் தராசுவின் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்!

சென்னை — 15, சைதை வி. முரளி.

* 'இன்னும் நான்கு மாதங்களுக்குள் குடிநீர்ப் பிரச்னை சீரடையா விட்டால், நடிகர்களுடன் மக்கள் இணைந்து போராட்டத்தை நடத்துவேன்' என்று ஜெகதாஸ் கூறி இருக்கிறார். நான்கு மாதத்திற்குள் கண்டிப்பாக மழை வந்து நிலைமை சீராகிவிடும் என்பதால் ஸ்டண்ட் அடித்திருக்கிறார் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

சென்னை — 17, எஸ். வி. ராஜசேகர்.

* சுப்பிரமணிய சுவாமி சொன்னது போல, இந்தியாவிலுள்ள எத்தனையோ பலபிரச்னைகள், சுலபமாகத் தீர்த்து வைக்கப்படக் கூடியவை. ஆனால் எந்த ஒரு பிரச்னையையும் பூதாகாரமாக வளர்த்துவிட்டு, அதில் குளிர்காயும் நம் நாட்டு அரசியல் தலைவர்களை நினைத்தால் வேதனையாக இருக்கிறது. (அந்த நெருப்பே ஒருநாள் அவர்களைச் சுட்டு எரிக்கும் என்பது வேறு விஷயம்). இப்படிச் செய்தால்தான் ராஜதந்திரம் என்று வேறு நினைத்துக் கொள்கிறார்கள். இதற்குப் பதிலாக, தன் பதவி அதிகாரங்களைக் காட்டாமல் எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண மனிதாபிமான அடிப்படையில் நேர்மையாக அவற்றை அணுகினால், எந்தப் பதவியும், புகழும் பணமும் வேண்டித் தலைவர்கள் அலைகிறார்களோ, அவை தாமாகவே அவர்களை வந்து அடையும்.

சாலிகிராமம், இந்திரா விஜயகுமார்.

* கல்கி 12.7.87 இதழில் "உமியும் தவிடும் நாட்டையே உயர்த்தும்" எனத் தலைப்பிட்ட கட்டுரையைப் படித்தேன். இந்தக் கட்டுரை மிக நன்றாகச் சிறிய முறையில் எழுதப்பட்டதற்கு எங்களுடைய மனமார்ந்த பாராட்டுக்கள். இந்தக் கட்டுரையில் "சைக்ளோன்" எனப்படும் புதுவகை உலையைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. இந்த உலைகளைவிட மிகவும் திறமை மிக்க "Fluidised Bed" உலைகள் எங்கள் "சிதார் வெசல்ஸ் லிமிடெட்" திருச்சி, நிறுவனத்தால் தயாரிக்கப்படுகின்றன. இந்த உலைகளை உபயோகிப்பதால் ஒரு டன் நீராவி தயாரிக்கத் தேவைப்படும் உமியின் அளவு மிகவும் மிச்சப்படும். இந்த வகை நவீன உலைகளைத் தவிட்டு எண்ணெய் ஆலைகள் மட்டும் அல்லாது, சர்க்கரை ஆலைகள், ஆல்கஹால் தொழிற்சாலைகள் இதர கெமிக்கல்ஸ் நிறுவனங்களிலும் பெரும் அளவில் உபயோகிக்கலாம். நிலக்கரி உபயோகம் தவிர்க்கப்படுவதுடன், பெரும் அளவில் பணம் மிச்சப்படும்.

திருச்சி — 1. கி. பாஸ்கரன்.
சிதார் வெசல்ஸ் லிமிடெட்

# முதல் இந்திய கவர்னர் ஜெனரல்

1

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV
ராஜ்மோகன் காந்தி

பிரிட்டிஷ் ஆட்சியின் கவர்னர் ஜெனரல்களும் குடியரசு இந்தியாவின் ஜனாதிபதிகளும் வாழ்ந்த, வாழ்ந்து வருகின்ற அரசாங்க மாளிகை, எட்வின் லுட்யென்ஸ் என்பவரால் கற்பனை செய்யப்பட்டு, வரைபடமாகிப் பின்னர் நிர்மாணிக்கப்பட்டது. புது தில்லியின் எந்த இடத்தில் மாளிகை எழ வேண்டும் என்பதைக் கூட அவரே நிர்ணயித்தார். அந்த மாளிகைக்குள் என்னென்ன மேஜை, நாற்காலி, கட்டில்கள் எந்தெந்த வடிவில், எப்படி உருவாக்கப்பட வேண்டும் என்பதைக் கவனித்தார். முகலாய பாணியில் மாபெரும் தோட்டம்; மாளிகையைச் சுற்றி அமைய வேண்டிய சாலைகள்; இதர கட்டடங்கள் ஆகியவற்றின் வடிவமைப்பிலும் அவருடைய கட்டடக் கலை ஆற்றல் ஊடுருவியது.

ஐந்து ஏக்கர் பரப்பளவுள்ள அரசாங்க மாளிகையின் உள்ளே 340 அறைகள்! அவற்றை இணைக்கும் பாதைகளின் மொத்த நீளம் ஒன்றரை மைல்! மாளிகையைக் கட்டச் சிவப்பு வெள்ளைக் கற்கள் டோல்பூரிலிருந்து வந்தன; வெள்ளை சலவைக்கற்கள் ஜோத்பூரிலிருந்து வந்தன; கறுப்புச் சலவைக் கற்கள் பாடியாலாவிலிருந்தும் மஞ்சள் சலவைக் கற்கள் ஜெய்சால்மீரிலிருந்தும் பச்சை பரோடாவிலிருந்தும் பழுப்பு நிற சலவைக் கற்கள் ஐரோப்பாவிலிருந்தும் வந்தன! ராஜபுதனக் கல் தச்சர்கள் சலவைக் கற்களை வடிவமைத்து அடுக்கினார்கள். பதினைந்தரை ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த மொகலாய பாணித் தோட்டத்தை மாலைச் சூரியன் தகதகக்கச் செய்தது. இத்தாலியிலிருந்து வந்த கலைஞர்கள் மாளிகையின் உள்ளே சுவரிலும்கூரையிலும்சித்திரக்கோலங்களைத் தீட்டினார்கள்.

இந்த மாளிகை இப்போது ஸி. ஆரின் இல்லமாயிற்று. எத்தனை காலத்துக்கோ — அது அவருக்குத் தெரியாது. அவருடைய தகப்பனார் மாதச் சம்பளம் ஐந்து ரூபாயை மிக உயர்வாக மதித்துப் பெற்றுக் கொண்டவர். ஸி. ஆரோ மகாத்மா காந்தியால் மனம் மாற்றப்படுவதற்கு முன்னர் பிரிட்டிஷ் ஆட்சியை ஒழிக்க வெடிகுண்டும் துப்பாக்கித் தோட்டாவுமே துணை என்று கருதியவர். அந்த பிரிட்டிஷ் ஆட்சி முடிவடைந்துவிட்டது. ஆனால் இந்தியா இன்னமும் இங்கிலாந்து மன்னரின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. ஸி. ஆர். அரசாங்க மாளிகையில் மன்னரின் பிரதிநிதியாகத்தான் நுழையப் போகிறார்! பல கவர்னர் ஜெனரல்களின் எதிரியாக விளங்கிய ஸி. ஆர்., தாமே ஒரு கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்கப் போவது ஒரு விசித்திரம்தான்! அநேகமாக இவரே கடைசி கவர்னர் ஜெனரலாகவும் இருப்பார். கதைகளில் காணப்படும்



• அதிகாரிகள் அறிமுகம்

இத்தகைய விநோத நிலை வாழ்க்கையிலும் கண்ணுக்கு மெய்யாக நடந்து கொண்டிருந்தது!

காலங்களைக் கடந்து வாரன்ஹேஸ்டிங்ஸுடன் தாம் கைகுலுக்குவது போலவும் "நீ ஆதி; நான் கடைசி!" என்று அவரிடம் கூறுவது போலவும் ஸி. ஆர். கற்பனை செய்து பார்த்தார்! ஆனால் ஹேஸ்டிங்ஸுக்கு ஏராளமான அதிகாரங்கள் இருந்தன. ஸி. ஆருக்கு அவை இராது. ஜவாஹர்லாலிடமும் பட்டேலிடமுமே இன்று அதிகாரங்கள் குவிந்திருந்தன. ஆனால் அவ்விருவரும் மவுண்ட்பேட்டனைச் சார்ந்து இருந்தது போலவே ஸி. ஆரையும் கலந்தாலோசிப்பார்கள்.

இந்திய விமானப்படையின் விமானம், புதுதில்லியில் நிமிஷ நேரமும் பிசகாமல் வந்திறங்கியது. அப்போதுதான் ஒரு மழை பெய்து ஓய்ந்து வெப்பத்தைத் தணித்திருந்தது. மவுண்ட்பேட்டன், நேரு, பட்டேல் மற்ற அமைச்சர்கள் மட்டுமின்றி பிரிட்டிஷ்காரர்களான முப்படைத் தளபதிகளும் ஸி. ஆரை வரவேற்கக் காத்திருந்தனர்.

பூரண அமைதி நிலவ, ஸி. ஆர்., ராணுவ அணிவகுப்பு மரியாதையை ஏற்றார். இத்தருணத்தில் மவுண்ட்பேட்டன் மெல்ல விமான நிலையத்திலிருந்து நழுவிச் சென்றார். ஸி. ஆர். அரசாங்க மாளிகைக்கு வரும்போது அவரை எதிர்கொண்டு அழைக்க அவர் அங்கே இருந்தாக வேண்டுமே! ஜவாஹர்லால் உடன்வர, ஸி. ஆர்., அரசு மாளிகையை அடைந்தார். அதன் தர்பார் கூடத்துக்கு அழைத்துப் போகும் படிக்கட்டுகளுக்கு முன்னால் காரைவிட்டு இறங்கினார். அந்தப் படிகளின் மையப்பகுதியில் ரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. கம்பளத்தின் இரு பக்கங்களிலும் அலங்காரமான சீருடையில் மெய்க்காவல் வீரர்கள் அணிவகுத்து நின்றனர்.

ஸி. ஆர். காரை விட்டு இறங்கியபோது அரசு உயர் அதிகாரிகள் சிலரும் புதுதில்லியின் முக்கிய புள்ளிகள் சிலரும் ஒரு கூட்டமாக நின்று முகமன் கூறினார்கள். ஆனால் ஸி. ஆர். ஒரு பிரமிப்பில் இருந்ததால் அவர்களைக் கவனிக்காமலே மேலே சென்று விட்டார்!

நேரு, ரத்தினக் கம்பளத்தைத் தவிர்த்து, அதன் இடப்புறத்தில் படிகளில் ஏறினார். கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்க வந்தவரோ, தம்மை விட்டுப் பிரியாத கைத்தடியை ஊன்றிக் கொண்டு மெல்லப் படிகளில் ஏறினார். அந்தப் படிகள் ஏராள எண்ணிக்கையில் இருந்தன என்பதோடு மிக அகலமாக மட்டுமின்றி உயரமாகவும் இருந்தன. ஸி. ஆர். களைத்துத்தான் போனார்.

படிக்கட்டின் மேலே மவுண்ட்பேட்டன் ஸி. ஆருக்கு 'ஸல்யூட்' செய்துவிட்டுப் பிறகு கைகுலுக்கினார். திருமதி எட்வினா மவுண்ட்பேட்டன் கைகுலுக்கினார். அவர்களுடைய மகள் பமிலா, முதலில் கைகூப்பிக் குனிந்து

"என் மனைவி நாலு நாளா சாப்பிடலை..."

"டாக்டர்கிட்டே அழைச்சுக்கிட்டு போக வேண்டியதுதானே?"

"அது கலபமாச்சே. ஆனா ஜவுளிக் கடைக்கு அழைச்சுக்கிட்டுப் போனாதானே அவ கோபம் தீரும்!"

— மணியன் தர்மலிங்கம்.



வணங்கி, பிறகு கைகுலுக்கினாள். ஸி. ஆர். படியேறி வந்த சிரமத்தை மறைத்துக் கொண்டு பெரிய புன்னகையாக உதிர்த்தார்!

அன்று மாலை ஒரு பிரம்மாண்டமான வரவேற்பு அளித்தார் மவுண்ட்பேட்டன். சுமார் 6000 விருந்தினர்! எல்லாருமே ஸி. ஆரைப் பார்க்க ஆசைப்பட்டார்கள். இந்த வைபவம் பற்றி பிறிதொரு சமயம் ஸி. ஆர். நினைவுகூர்ந்தார்: "நான் அன்று பல புதிய முகங்களைப் பார்த்தேன்; ஆனால் அவர்கள் எல்லோருமே என்னை யுகம் யுகமாக அறிந்தவர்களைப் போல் நடந்து கொண்டார்கள்! தங்களால் இயன்ற உதவிகளையெல்லாம் எனக்குச் செய்யத் தயாராக இருப்பதாகச் சொன்னார்கள். நான் பெற்ற இலவச அறிவுரைகள் ஏராளம்!"

அன்று இரவு அவரும் மவுண்ட்பேட்டனும் அரசாங்க மாளிகையின் ஊழியர்கள் பற்றியும் கவர்னர் பதவிகளுக்கு அண்மையில் நியமனமாக வேண்டியவர்கள் குறித்தும் பேசினார்கள். இன்னும் ஓரிரு ஆண்டுகள் தாமதமாகச் சுதந்திரம் கிடைத்திருந்தால் இனக் கலவரங்களைத் தவிர்த்திருக்க முடியுமோ என்பது பற்றி விவாதித்தார்கள். இந்தக் கேள்வி வருங்காலத்தில் அடிக்கடி மவுண்ட்பேட்டனிடம் கேட்கப்படும் என்பதை உணர்ந்திருந்த ஸி. ஆர்., ஆறுதலாகச் சொன்னார்: "உங்கள் மூலம் பிரிட்டன் அதிகார மாற்றத்தை நிகழ்த்தியிரா

"இந்தப் பேச்சாளர் என்ன இப்படிப் பேசுகிறார்?"

"எல்லாக் கட்சிகளிலும் இருந்தவராச்சே, அதான்!"

— கடுவை கோபால்சாமி.




ஷெர்லாக் ஹோம்ஸைப் படைத்துப் பிரபல எழுத்தாளராக விளங்கிய ஆர்தர் கானன் டாயில் ஒரு டாக்டரும் கூட. ஆரம்ப காலத்தில் டாக்டர் தொழிலில் அவருக்குப் பிரமாதமான வருமானம் கிடையாது. வருமான வரி அலுவலகத்துக்குத் தமது வருவாய்க் கணக்கை அனுப்பிய போது வருமானம் இருநூறு பவுண்டுகள் என்று குறிப்பிட்டிருந்தார். அதிகாரி அதை நம்பவில்லை. "ரொம்பக் குறைச்சல்" என்று குறிப்பு எழுதி டாயிலுக்கே அதைத் திருப்பி அனுப்பினார். டாயில் என்ன லேசுப்பட்டவரா! அதன் கீழேயே "நீங்கள் சொல்வது ரொம்ப சரி!" என்று எழுதி மறுபடியும் அதையே வருமான வரி அதிகாரிக்கு அனுப்பி வைத்துவிட்டார்!

— ஏ. கே. நாசர்.

தந்தை: "என்ன இது, கல்யாணத்துக்கு இன்னும் இரண்டு மாசம் இருக்கு. மாப்பிள்ளைப் பையன் அடிக்கடி உன்னைத் தனியாக் கூப்பிட்டுப் பேசறானே?"

மகள்: "மாசக் கடைசியாச்சே; கைமாத்துக் கேட்கத்தான் வந்து போறார்!"

— வெ. ராதாகிருஷ்ணன்.

விட்டால் எதிர்காலத்தில் அதைச் செய்யவே முடியாது போகும். காரணம், வழங்கப்படுவதற்கு பிரிட்டனிடம் அதிகாரமே இராது! கலகம் உருவாகி, ஒரே குழப்பமும் களேபரமும் ஏற்பட்டிருக்கும்." அவர்கள் பாகிஸ்தான் பற்றியும் பேசினார்கள். இன்னும் இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் அந்நாட்டின் கிழக்குப் பகுதி தனியே பிரிந்து தனி நாடாகி விடும் என்று இருவருமே உணர்ந்து ஒப்புக் கொண்டார்கள். இந்தத் தீர்க்க தரிசனம் முற்றிலும் உண்மையாயிற்று. பங்களாதேசம் சுதந்திர நாடான போது மவுண்ட் பேட்டன் இதனைப் பகிரங்கமாக அறிவித்தார்.

மறுநாள் ஜூன் 21 ஆம் தேதி ஸி. ஆர். ஆட்சித் தலைவரானார். மாளிகையின்புற வாசலுக்கு வெளியே பெரிய கூட்டம் ஜெய கோஷம் செய்தது. ஒளிமயமாக விளங்கிய தர்பார் கூடத்தில் தேசக் கொடிக்குப் பக்கத்தில் கவர்னர் ஜெனரலின் பிரத்தியேகக் கொடியும் பிரதான இடம் பெற்றது. அந்தக் கொடியில் நீல நிறப் பின்னணியில் அசோகர் ஸ்தூபியின் மூன்று சிங்கங்களுக்குக் கீழே கிட்டத்தட்ட வட்ட வடிவமான 'ஸி' என்ற ஆங்கில எழுத்தும் அதனுள் அடங்கிய "ஆர்" என்ற ஆங்கில எழுத்தும் இடம் பெற்றன. சிம்மாசனத்தின் சிவப்பு நிறத்துக்கு முன்னால் ஸி. ஆரின் எளிய, தூய, வெள்ளைக் கதராடை பளிரென்று தெரிந்தது. பிரதம நீதிபதி கானியா பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். சுருக்கமாகப் பேசிய ஸி. ஆர்., இந்தியாவின் தலைமைப் பதவி, இந்தியர் ஒருவருக்குத் தரப்படுவது இதுவே முதல் முறை என்பதை ஞாபகப்படுத்தினார். மவுண்ட்பேட்டனின் பற்றற்ற மனப்பான்மையையும் சுறுசுறுப்பையும் போற்றினார். "ராஜதந்திரத்திலும் சரி, ராணுவத் தந்திரத்திலும் சரி, அதிகமான அனுபவம் இல்லாதவன் நான் என்பதை நினைவில் வைத்திருந்து என் செயல்பாடுகளை எடை போடுங்கள்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டார். "நான் தவறுகள் செய்யாதிருக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன்" என்றார். "நான் எந்த இந்திய நாட்டுக்குச் சேவை செய்கிறேனோ, அந்த இந்தியா, ஜாதி, மத, இன வேறுபாடுகளைக் கடந்து இந்நாட்டின் குடிமகனாக இருப்பதில் அனைவரும் பெருமைகொள்ளும்படியான உயர்ந்த கொள்கையைப் பின்பற்றுவதிலிருந்து என்றும் மாறாது" என்று உறுதி அளித்தார்.

பதவி ஏற்பு வைபவத்தைத் தொடர்ந்து புதிய கவர்னர் ஜெனரல் ஒரு வரவேற்பு அளித்தார். மவுண்ட் பேட்டன் குடும்பம் விடைபெற்றது. பிரதமர், கவர்னர் ஜெனரலைச் சந்தித்துத் திரும்பினார். ஹைதராபாத்தின் பிரதிநிதியும் வந்து ஸி. ஆரிடம் பேசிவிட்டுப் போனார். அப்போது ஹைதராபாத்தைச் சுதந்திர நாடாக உருவாக்க நைஜாம் முயன்று கொண்டிருந்தார்!

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



* தாமத ராஜினாமா
* துணை போகலாமா?
* கொடி ஏற்றி...
* என்ன பேசுவர்?

# அமிதாப் ராஜினாமா ஆரம்பத்திலேயே நடந்திருந்தால்?

*** சித்ரபானு: விருத்தாசலம்.**

**? 'பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்' என பாரதி எதை நினைத்துப் பாடினார்?**

! கோயில்களின் புனிதத்தன்மை கல்விக் கூடங்களிலும் காணப்பட வேண்டும்; உள்ளத் தூய்மை, புறத்தூய்மை இரண்டுக்கும் முக்கியத்துவம் தரப்பட வேண்டும் என்ற நோக்கில்தான் அப்படிப் பாடினார். அவலை நினைத்துக் கொண்டு உரலை இடிப்பது போல யாராவது ஏதாவது புது விளக்கம் தந்தால் நம்பாதீர்கள்!

*** சுமதி ரகு, சென்னை — 83.**

**? நெய்வேலி தண்ணீரைச் சென்னைக்குக் குழாய்கள் மூலம் எடுத்து வரக் கூடாதா?**

! ஏன் கொண்டு வரக் கூடாது? பேஷாகச் செய்யலாம்! சென்னை நகரின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்ப்பது பற்றி, சி. சுப்பிரமணியம் உள்படப் பல அறிஞர்கள் கலந்து கொண்ட ஒரு கருத்தரங்கையே நடத்தியுள்ளது விஜில் என்ற அமைப்பு. பல்வேறு யோசனைகளில் உருப்படியானவற்றையும் காரிய சாத்தியமானவற்றையும் தேர்ந்தெடுத்துத் தாராளமாக நிறைவேற்றலாம். ஆனால் நமது நாட்டில் அரசுகளும் ஆளும் கட்சிகளும் பிரச்னைகள் தீராமல் நீடிப்பதிலேயே ஆதாயம் காண்கின்றன. அதனால்தான் நாற்பது சுதந்திர தினங்களைக் கண்ட பிறகும் நமக்கு விடிவு காலம் பிறக்கவில்லை.

*** ஆர். வேலுமணி; கடலூர்.**

**? வருகிற சுதந்திர தினத்தன்று கொடியேற்றி ராஜீவ் காந்தி எம். ஜி. ஆர். ஆகியோர் என்ன பேசுவார்கள்?**

! வடக்கில் உள்ளவர் வழக்கம் போல் ஆட்சியின் ஸ்திரத்தன்மையைக் குலைக்க, அயல் நாட்டு உள்நாட்டுச் சதிகாரர்களின் கூட்டுச் சதி நடப்பதாகக் கூறுவார்: நம்மவர் அண்ணா நாமத்தை வாழ்த்துவார்.

*** டி. டேவிட் ஜான்பிரிட்டோ, இருத்துறைப் பூண்டி.**

**? அமிதாப் ராஜினாமா, அஜிதாப் விசாரணை போன்ற நடவடிக்கைகளை ஆரம்பத்திலேயே மேற்கொள்ள உத்தரவிட்டிருந்தால் ராஜீவ் காந்திக்குக் கௌரவமாய் இருந்திருக்குமல்லவா?**

! இருந்திருக்கலாம். அதே சமயம் மக்களின் கவனம் திசைதிருப்பப்பட்டும் போயிருக்கலாம். அதனால் பல உண்மைகள் வெளிவராமலேயே அமுக்கப்பட்டிருக்கலாம். ஒரு வகையில் ராஜீவ் காந்தி பிடிவாதம் காட்டியதே நல்லதாயிற்று. அந்தப் பிடிவாதம்தான் எதிர்த் தரப்பிலும் ஒரு பிடிவாதத்தை வளர்த்து, பரிசுத்த முகமூடிகளைக் கிழித்தெறிய உதவியிருக்கிறது.

*** மு. ஜனார்த்தனன், குளச்சல்.**

**? இறைவன் திருவிளையாடல்களில் நம்மை நெறிப்படுத்துவது கண்ணன் விளையாட்டா? கந்தன் விளையாட்டா? 19.7.87 மாலை எட்டு மணிக்கு மதுரை வானொலியில் ஒலிபரப்பினார்கள். நடுவர்: குன்றக்குடி அடிகளார். உங்கள் கருத்து?**

! மேற்படி நிகழ்ச்சியை நான் கேட்கவில்லை. ஆனால் பொதுவான எனது கருத்து இதுபோன்ற பட்டி மன்றங்கள் தேவையற்றவை; இதற்கெல்லாம் மடாதிபதிகளும் அரசு இலாகாவான வானொலியும் துணை போவது ஆபத்தானது என்பதுதான்.




* எதை நினைத்து...?

கந்தன் ஆதரவாளர் கண்ணனைச் சாடாமலும் கண்ணன் ஆதரவாளர்கள் கந்தனைச் சாடாமலும் இருந்திருந்தால் கூட இந்தத் தலைப்பை ஏற்பதற்கில்லை. நமக்குக் கந்தன் கண்ணன் இருவருமே இரு கண்கள்.

*** கமாளி, மேலப்பாலையூர்.**

**? காங்கிரஸை ஒழித்துக் கட்டப் போவதாக வரிந்து கட்டிய ராஜாஜி, மொரார்ஜி, காமராஜ் போன்ற மாபெரும் (!) தலைவர்களாலேயே முடியாததை வி. பி. சிங்கா சாதிக்கப் போகிறார்?**

! ராஜாஜி, மொரார்ஜி, காமராஜ் போன்றவர்கள் எடுத்த முயற்சிகள் பலனளிக்கவில்லை என்று சொல்கிறீர்கள்? காங்கிரஸ் முன்பு எத்தனை மாநிலங்களில் ஆண்டது, இன்று எத்தனை மாநிலங்களில் ஆள்கிறது? சற்றே பாருங்கள். இடையில் சில காலம் மத்திய ஆட்சியையும் காங்கிரஸ் பறி கொடுத்து விட்டு நிற்கவில்லையா? யார் கண்டது? வி.பி. சிங் கொடுக்கிற நூறாவது கடைசி அடியில்தான் காங்கிரஸுக்கு நூறுக உடையப் போகிறதோ என்னவோ? இதிலும் உடையாது போனால் நூற்றி ஒராவது அடியைக் கொடுக்க ஒருவர் வருவார்.

*** எம். இராசன், கிருஷ்ணகிரி.**

**? பத்தாவது கிரகம் கண்டுபிடித்திருக்கிறார்களே, இனி நவக்கிரகங்களுக்கு மதிப்பு இராது இல்லையா?**

! நம்முடைய முன்னோர்கள் டெலஸ்கோப்பு போன்ற சாதனங்கள் ஏதுமின்றி நவக்கிரகங்களைக் குறிப்பிட்டு அவற்றின் இயக்கங்கள் பற்றி நிர்ணயித்த காலத்தில் அது விஞ்ஞான அற்புதம்தான். ஆனால் நாளுக்கு நாள் விஞ்ஞானம் வளர்கிறது. அப்போது புதிய கண்டுபிடிப்புக்கள், பழைய உண்மைகளைப் பொய்யாக்குவதில் அதிசயமில்லை. ஆனால் ஜோசியம், ஜாதகம் என்பதெல்லாம் வேறு. அவற்றில் எனக்கு நம்பிக்கையில்லை. அதனால் நம்பிக்கை உள்ளவர்களை நான் வெறுக்கவும் இல்லை.

*** வண்ணை கணேசன், சென்னை — 11.**

**? ஜோஸியத்தில் எந்த ஜோஸியம் பிடிக்கும்?**

! இனி ஜோஸியம், குருவி ஜோஸியம் போன்றவற்றில் ஜோஸியரின் கருத்துக்கு இசைவாகக் குருவி சீட்டு எடுப்பதைப் பார்த்து அதன் திறமையை ரசிக்கலாம். ஆனால் அவற்றை இதற்குப் பழக்க என்ன பாடுபடுத்தினாரோ என்பதை எண்ணினால் அதுவும் பிடிக்காமல் போய்விடும்!

*** இராமலிங்க், தக்கலை.**

**? இந்திய அரசியல் எங்கே போய்க் கொண்டிருக்கிறது?**

! பஞ்சாயத்துத் தேர்தலில் ஒரு ஹரிஜன் போட்டியிட்டார் என்பதற்காக ஆந்திரப் பிரதேசம் நீருகொண்டா கிராமத்து ஹரிஜனங்கள் அடிக்கடி தாக்குதலுக்கு உள்ளாகிக் கொடுமைப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். இதனால் அந்தக் கிராமத்து ஹரிஜனங்கள் ஒட்டு மொத்தமாக அகதிகளாக வேறு புகலிடம் தேடிப் போக நேர்ந்திருக்கிறது. இதைப் பார்க்க, நமது அரசியல் கற்கால அரசியலாகத்தான் தோன்றுகிறது.

*** த. சத்தியநாராயணன், அயன்புரம்.**

**? மாஜிக் ஷோக்களைப் பார்க்கும் போது என்ன நினைப்பீர்கள்?**

! நமது அரசியல்வாதிகள் அயல்நாட்டு வங்கிகளில் நம் நாட்டின் செல்வத்தை மறையச் செய்து, மீண்டும் தங்களுக்குத் தேவைப்படும்போது இங்கே தோன்றச் செய்கிற மாயத்துக்கு நிகராக எந்த மாஜிக் ஷோ இருக்கிறது? லேட்டஸ்ட்டாக ஒரு மாயம்: நில வாயுவை மூலப் பொருளாகக் கொண்டு ரசாயன உரம் தயாரிக்க இத்தாலிய நிறுவனம் ஒன்றுக்கு காண்ட்ராக்ட் தரப்பட்டுள்ளது. இதில் நூறு கோடி ரூபாய் வரை நம் அரசு மிச்சப்படுத்தியிருக்க முடியும் என்று உலக வங்கியே கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறது. அந்த நூறு கோடி யார் கணக்கில் எங்கெங்கே பதுங்கியிருக்கிறதோ! மாயா ஜாலம்தான்!

*** அர. மணிவண்ணன், சென்னை — 16.**

**? 'இந்தியாவுக்கு ஆபத்து வந்துவிட்டது' என்கிறாரே ராஜீவ் காந்தி! ஆபத்து இந்தியாவுக்கா, இந்திரா காங்கிரஸுக்கா?**

! முதல் ஆபத்து, காங்கிரஸுக்குள்ளே தர்ம நியாயத்தைத் தட்டிக் கேட்கப் போய் வெளியேற்றப்பட்டவர்களுக்கு வந்திருக்கிறது. அவர்களை அடித்து நொறுக்கி, மிரட்டிப் பணிய வைக்க முயற்சி நடக்கிறது. இது, நடப்பது காங்கிரஸ் ஆட்சியா, குண்டர்கள் ஆட்சியா என்ற கேள்வியை எழச் செய்கிறது.

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**ஆர். வேலுமணி,**
**74/9, சுப்பராய நகர்,**
**கடலூர் — 607 002.**



# பேர் சொல்லும் பிள்ளை

ஒரு பழைய சிவாஜி படத்தை எடுத்துக் கொண்டு, (படிக்காத மேதை) அதை இங்கே கொஞ்சம் வெட்டி, அங்கே கொஞ்சம் கூட்டி, நூறடிக்கு ஒரு முறை சென்டிமென்ட் என்று ஞாபகம் வரவழைத்துக் கொண்டு திணித்து... நன்றாகவா இருக்கிறது?

கே. ஆர். விஜயாவின், மருமகப் பிள்ளை கவுண்டமணி திடீரென்று அந்தர் பல்டி அடித்துச் சகுனியாக வேண்டிய அவசியம் என்ன? ஆ... காரணங்கள் என்று சொல்வதெல்லாம் தண்ணீரில் ஊறின வைக்கோல் கட்டு ரகம்தான்... சவ... சவ...

செட்டி நாட்டுப் பாஷையை ஒரு படத்தில் ஒரு பாத்திரம் பேசினால் வித்தியாசமாக இருக்கும். அதற்கென்று, தலையைக் காட்டுகிற பாத்திரமெல்லாம் இழுத்து இழுத்துப் பேசினால்....? கமல் இந்தப் பாஷையில் விளையாடியிருப்பது இதுதான் முதல் தடவையோ? ஆனால் நின்று நிதானித்து அக்கறையாய், இண்டு இடுக்குகளிலெல்லாம் அந்த பாஷையில் புகுந்து புகுந்து வெளிப்படுபவர் ராதிகாதான். அடி ஆத்தி...!

மலேஷியாக்காரரும், பேர் சொல்லப் போகிற பிள்ளை கமலும் படம் தொடங்கியதிலிருந்து முடிவதற்குப் பத்து நிமிஷம் இருக்கும் வரை கட்டை விரலை உயர்த்தி உயர்த்திச் சவால் விட்டுக் கொண்டிருக்கிறார்களே. ஒவ்வொரு சவாலின் போதும் 'ஐயோ இனி மேல்தான் படம் ஆரம்பிக்கப் போகிறதா, போகிறதா' என்று ஒரு தண்டுவடச் சிலிர்ப்பை ஏற்படுத்தி விடுகிறார்கள்.

இத்தனை பாரா தாண்டியாகிவிட்டது. ஒரு வார்த்தை கூடப் பாராட்டவில்லையென்றால் எப்படி?

பிறந்த நாள் பார்ட்டியின் போது கமல் ஆடும் டான்ஸ், அவருக்கே உரித்தான ஸ்பெஷல் ஸ்டெப்ஸ், சர்க்கஸ் சாகசங்கள்... விடியோவில் பார்ப்பவர்கள் நிச்சயமாக மற்றொரு முறை இந்த இடத்தை மட்டும் போட்டுப் பார்ப்பார்கள்!

ஏ. வி. எம். முத்திரை இருப்பதால் 'ரிச்னெஸ்' இருக்கிறது... செட்டுகளில்.

ரவீந்தர் & ப்ரதர்ஸ் ஆஃபீஸில் அடிக்கிற கொட்டம்... பேர் சொல்லும் பிள்ளை படத்தில் மட்டும்தான் பார்க்க முடியும். யதார்த்தத்திற்கும் அந்தக் காட்சிகளுக்கும் இடையே உள்ள தூரம், தில்லிக்கும் மெட்ராஸுக்கும் இடையே உள்ள தூரம்!

சமீப காலமாய்,

எஸ். பி. முத்துராமன் நம்மை ஏமாற்றுவதென்பது சகஜமாகிவிட்டது.

ஆ டீ... கமல்?

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka

இந்த இடம் நல்ல இடம்,
பட்டுப் புடவைகளுக்கு சிறந்த இடம்.



ஹனீபா
டெக்ஸ்டைல்ஸ்
சர் தியாகராய ரோடு. பாண்டி பஜார். சென்னை-600 017